# கொல்லும் கொடிய பாவங்கள் ஏழு




பில்லி கிரகாம்

Pub. No. 59 K – TAMIL

First Edition : 1966
Copies : 2000
9th Reprint : September 1995
Copies : 2000
10th Reprint : March 2000
Copies : 2000
11th Reprint : April 2003
Copies : 2000

**FREEDOM FROM THE SEVEN DEADLY SINS**

**BILLY GRAHAM**



Translated into Tamil by
Mr. T. Koilpitchai, M.A., B.O.L.,

Cover Design : T. ALLWYN

Typeset at : Pushpam Computers, Pager 9628446271

J.R. PRINTECH, # 193/2 Kilpauk Garden Road, Kilpauk, Chennai - 600 010. Ph. 26477931

# முகவுரை

ஒரு நாள் காலையில் ஒரு குருவானவர் பாவத்தின் பயங்கரத்தைக் குறித்துச் சபையாரைக் கடுமையாய்க் கண்டித்துணர்த்திப் பேசினார் அதைக் கேட்டுக் கொண்டிருந்த ஓர் அங்கத்தினர் ஆராதனை முடிவில் அக்குருவானவரிடம் சென்று, "ஐயா, நீங்கள் இவ்வளவு காரசாரமாகவும், வெளிப்படையாகவும் பாவத்தைக் குறித்துப் பகிரங்கமாய்ப் பேசவேண்டியதில்லை. காரணம் எங்களுடைய வாலிபப் பையன்களும் பெண்களும் பாவங்களைக் குறித்து இவ்வளவு வெளிப்படையாய் அறிந்து கொண்டால் அவர்கள் வெகு எளிதில் பாவிகளாகி விடுவார்கள். வேண்டுமானால் பாவத்தைப் பாவம் என்று சொல்லாது, அதனை ஒரு 'குற்றம்' என்று சொல்வீராக. ஆனால் பாவத்தைக் குறித்து இவ்வளவு பகிரங்கமாய்ப் பச்சையாகப் பேச வேண்டாம்" என்றார்.

உடனே அக்குருவானவர் தன்னுடைய மருத்துவப் பெட்டியிலிருந்து 'நஞ்சு' என்று பெயர் தீட்டப்பட்டிருந்த ஒரு விஷ மருந்தை எடுத்து வந்து, அந்த அங்கத்தினரிடம் காட்டி, "ஐயா, நான் என்ன செய்யவேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்கள் என்பதை அறிகிறேன். நஞ்சு என்று தீட்டப்பட்ட சீட்டை இந்த மருந்துப் புட்டியிலிருந்து எடுத்துவிட்டு, அதற்குப் பதிலாக 'தேன்' என்ற பெயரை அல்லது யாவரும் விரும்பும் இன்னொரு இனிய பெயரை, அதே நஞ்சு நிறைந்த புட்டியின்மேல் எழுதச் சொல்லுகிறீர். அதே நஞ்சை எவ்வளவு தூரம் இனிப்பான மருந்து என்று எழுதுகிறேனோ அவ்வளவு தூரம் ஆபத்தாக முடியும் நஞ்சு நஞ்சுதான் நஞ்சுதனை நஞ்சு என்று வெளியரங்கமாய், தெளிவாக வெகு திட்டவட்டமாய்க் கூறாவிட்டால் ஆபத்து

நேரிடும். அது வஞ்சகமாகும். உள்ளதை உள்ளதென்று சொல்லவேண்டும் இல்லதை இல்லதென்று சொல்ல வேண்டும் பாவத்தைப் பாவம் என்று சொல்லிப் பகிரங்கமாய்க் கண்டித்துணர்த்த வேண்டும். பாவத்தைக் குறித்து ஏனோதானோவென்று அசட்டையாயிருக்கிறவர் மோசம் போவது திண்ணம்.

தற்காலத்தில் பாவத்தின் பயங்கரத்தையும் ஆபத்தையும் நாம் சரியாய் உணருகிறதில்லை. பாவம் மனிதனைக் கொல்லும் தன்மையுடையது. இக்கொடிய பாவத்தைப் பாவம் என்று வெளிப்படையாய்க் கூறாது, தற்காலத்தில் அதனை இலேசாக மதித்து, அப்பாவத்தோடு விளையாடி, அப்பாவத்தை இயற்கையான குற்றமென்றும், மனித பலவீனமென்றும், ஏதோ தவறுதல் என்றும் இலேசாக அதனைச் சாக்குபோக்குச் சொல்லி நிர்விசாரமாக இருந்துவிடப் பார்க்கிறோம். ஆனால் சத்திய வேதாகமம் பாவத்தின் பயங்கரத்தையும், பாவம் விளைவிக்கும் மரணத்தையும் வெகு திட்டவட்டமாய் வெளிப்படுத்தியிருப்பது போல, நாமும் பாவத்தைப் பாவம் என்று கூறிப் பகிரங்கமாய் முகதாட்சணியமின்றி கண்டித்துணர்த்த வேண்டும்.

மாபெரும் போப் கிரகோரி என்னும் புகழ்பெற்ற போப்பானவர் ஆறாம் நூற்றாண்டு இறுதியில் வாழ்ந்தார். அவர் பாவங்களையெல்லாம் ஏழு பிரிவுகளாகப் பிரித்துள்ளார். அவையாவன : ஆணவம், சினம், பொறாமை, காமம், பெருந்தீனி, சோம்பல், பேராசை, இவை 'கொல்லும் கொடிய பாவங்கள் ஏழு' என இத்தனை நூற்றாண்டுகளிலும் பெயர்பெற்று வந்திருக்கின்றன. பரிசுத்த வேதாகமத்தில் இந்தக் கொடிய பாவங்கள் ஏழும் மொத்தமாக ஒரே வசனத்தில் தொடர்ந்து கூறப்படாவிட்டாலும், வெவ்வேறு இடங்களில் பரிசுத்த வேதாகமத்தில் மனிதனைக் கொல்லக்கூடிய இக்கொடிய பாவங்களைப் பற்றி வாசித்தறிகிறோம். தாமஸ் அக்குவினாஸ் போன்ற பிரபல திருமறைப் பண்டிதரெல்லாம் போப் கிரகோரி என்பவர் பாவங்களையெல்லாம் இவ்வாறு ஏழு வகையாகப் பிரித்திருப்பதை அங்கீகரித்துள்ளார்கள். எனவே, நீதி நெறிப்படி பாவங்களை ஏழு வகைப்படுத்துவது எல்லாராலும் ஒத்துக் கொள்ளப்பட்டுள்ளது.

புலவர்கள் இக்கொடிய ஏழு பாவங்களைக் குறித்து எழுதியுள்ளார்கள். தார்ந்தே என்னும் புலவர் இந்தப் பாவ அட்டவணையின் ஒழுங்கு வரிசையைப் பின்பற்றி 'உத்தரிக்கும் ஸ்தலம்' என்னும் தலைப்புப் பெற்ற நூலில் வரைந்துள்ளார். சாஸர் என்னும் புலவர் தீட்டிய 'குருவானவரின் கதை, என்ற நூலிலும், புலவர் மார்லோ எழுதியுள்ள 'பண்டிதர் பாஸ்டஸ்' என்ற நூலிலும் இந்த ஏழு கொடிய பாவங்களின் விவரம் காணலாம். 'கொல்லும் கொடிய பாவங்கள் ஏழு' என்ற தலைப்புக் கொண்ட ஓர் இத்தாலிய திரைப்படம் அண்மையில் வெளியானது.

'தீர்மான நேரம்' ஒலிபரப்புகளில் ஏழுநாள் வானொலிச் செய்தியாக வெளியான இந்த ஏழு கொடிய பாவங்கள் இப்பொழுது புத்தக வடிவமாக வெளியிடப்பட்டுள்ளன.

பில்லி கிரகாம்

# 1

# ஆணவம்

மனிதனைக் கொல்லக்கூடிய கொடிய பாவங்களை ஏழு வகைப்படுத்தலாம். அவற்றுள் தலையாய முதற்கொடிய பாவம் ஆணவமாகும் "அழிவுக்கு முன்னாது அகந்தை; விழுதலுக்கு முன்னானது மனமேட்டிமை" என்று நீதிமொழிகள் 16:18 இல் கூறியுள்ளவாறு, எல்லா அழிவுக்கும் முதற்காரணமாக இயற்கையாய் முதலாவது வருவது ஆணவமே. அநேகமாக மற்ற எல்லாப் பாவங்களுக்கும் அடிப்படைக் காரணமாக அகத்திலும் ஒழுக்கத்திலும் எழும் முதற் பாவம் ஆணவம். தன்னலத்தின் வெவ்வேறு வடிவங்களே வெவ்வேறு பாவங்களாகும் 'நான்' என்ற ஆணவமே எல்லாப் பாவங்களுக்கும் ஆதி வித்தாகும் மற்றவர்களைவிட தான் தான் பெரியவன் என்ற எண்ணமும், தகுதிக்கு மிஞ்சி தன்னையே தகாத முறையில் தகாதவாறு வீணாகப் பெருமைப்படுத்திக் கொள்ளுதலும் ஆணவம் முளைப்பதற்கு மூல வித்துக்களாகும் "மனமேட்டிமையுள்ளவனெவனும் கர்த்தருக்கு அருவருப்பானவன்; கையோடே கைகோர்த்தாலும் அவன் தண்டனைக்குத் தப்பான்" என்று பரிசுத்த வேதாகமம் நீதிமொழிகள் 16:5இல் கூறியுள்ளது. மீண்டும் நீதிமொழிகள் 29:23 இயம்புவதை கேளுங்கள்: "மனுஷனுடைய அகந்தை அவனைத் தாழ்த்தும்; மனத்தாழ்மையுள்ளவனோ கனமடைவான்."

ஆண்டவர் அருவருக்கும் ஆணவம் சுயமரியாதை அன்று. அல்லது நியாயமான சுய மதிப்பு உணர்ச்சியுமன்று. உண்மையான தகுதிக்கு மிஞ்சி, தகுதியற்ற முறையில் தன்னையே அகந்தையோடு 'பெரியவன்' என்று எண்ணிக் கொள்ளுதல் ஆணவமாகும். இந்த ஆணவம் தன்னையே தகுதியற்ற தன்மையில் பெருமைப்படுத்திக்கொண்டு மற்ற மனிதரையும் கடவுளையும் இழிவுபடுத்தி வெறுத்து ஒதுக்கித் தள்ளிவிடுகிறது. எல்லாம் வல்ல இறைவனைவிட தன்னையே பெரிதாகக் கருதும் இந்தத் தற்பெருமையையே கடவுள் அருவருக்கிறார். பிற மனிதரை வீண் கர்வத்தோடு புறக்கணித்து வைக்கும் அகந்தையை ஆண்டவர் வெறுக்கிறார். "... மேட்டிமைக் கண்ணனையும் பெரு நெஞ்சுள்ளவனையும் பொறுக்க மாட்டேன்" என்று ஆண்டவர் சங்கீதம் 101:5இல் கூறியுள்ளார். ஆணவத்தை ஆண்டவரால் சகிக்க முடியாது. அவர் அதனை அருவருக்கிறார்

ஆணவம் அநேக வடிவங்களில் தலைகாட்டும். ஆனால் அத்தனையும் அகந்தையான இதயத்தினின்று எழும்புவன வாகும். சிலர் மேட்டிமையான பார்வையில் ஆணவம் கொள்ளுகிறார்கள். சிலர் தங்கள் குலத்தில் ஆணவம் கொள்ளுகிறார்கள். சிலர் தங்கள் அலுவலில் ஆணவம் கொள்ளுகிறார்கள். வேறுவகையாகக் கூறு மிடத்து, பக்திப் பெருமை, அறிவுப் பெருமை, செல்வப் பெருமை, சமூகப் பெருமை என்று பெருமையைப் பலவகைப்படுத்தலாம். பெருமையுள்ள மாபெரும் கொடிய பெருமை பக்திப் பெருமையாகும். இந்த ஆவிக்குரிய பெருமை லூசிபர் என்னும் தேவதூதனை அதமாக்கிக் கொடும் பேயாக்கி விட்டது. இந்த ஆவிக்குரிய ஆணவந்தான் பாவத்தின் ஆதிமூல வித்தாகும். இந்த ஆவிக்குரிய அகந்தையிலிருந்து தான் ஆதியில் பாவம் ஆரம்பமானது.



ஏசாயா 14:12-15 சொல்வதைக் கேளுங்கள்: "அதிகாலையின் மகனாகிய விடிவெள்ளியே, நீ வானத்திலிருந்து விழுந்தாயே! ஜாதிகளை ஈனப்படுத்தி னவனே, நீ தரையிலே விழ வெட்டப்பட்டாயே!

"நான் வானத்துக்கு ஏறுவேன், தேவனுடைய நட்சத்திரங்களுக்கு மேலாக என் சிங்காசனத்தை உயர்த்துவேன்; வடபுறங்களிலுள்ள ஆராதனைக் கூட்டத்தின் பர்வதத்திலே வீற்றிருப்பேன் என்றும், நான் மேகங்களுக்கு மேலாக உன்னதங்களில் ஏறுவேன்; உன்னதமானவருக்கு ஒப்பாவேன் என்றும் நீ உன் இருதயத்தில் சொன்னாயே."

"ஆனாலும் நீ அகாதமான பாதாளத்திலே தள்ளுண்டு போனாய்."

இப்பகுதியில் லூசிபர் தன்னை உன்னதமான கடவுளுக்கும் மேலாக உயர்த்தி நான், நான் என்று ஆணவத்தோடு ஐந்து தடவை "நான் ஏறுவேன்", "நான் உயர்த்துவேன்", "நான் வீற்றிருப்பேன்", "நான் உன்னதங்களில் ஏறுவேன்", "நான் உன்னதமானவருக்கு ஒப்பாவேன்", என்று வீண் கர்வத்தோடு அகந்தை கொப்பளிக்கக் கூறியுள்ளதைக் கூர்ந்து கவனியுங்கள். லூசிபரின் இதயத்தில் எழுந்த நான் என்ற ஆணவமே இம்முழு உலகிலும் செய்யப்பட்ட முதல் பாவமாகும். லூசிபரைப்போல் நாமும் ஆண்டவர் எனக்கு வேண்டாம் என்று அவரை ஒதுக்கித் தள்ளிவிட்டு, நாமே நமக்கு ஆண்டவராகும்பொழுது, அந்த ஆணவப் பேய் நம்மையும் பிடித்துக் கொள்ளுகிறது.

ஆவிக்குரிய ஆணவம் கொண்டவன் ஆண்டவரது அருளையே நம்பிப் பற்றிக் கொள்ளாது, தன்னுடைய சுயநீதியையே நம்பி, அதிலேயே வீண் திருப்தி கொண்டு,

அழிந்து போகிறான். கிறிஸ்துவின் கிருபையை நம்பிப் பிழைக்காதவர்கள் கடவுளுடைய நியாயத்தீர்ப்புக்குட் படுவார்கள் தற்பெருமை கொண்ட மமதையாளர்கள் பழைய பரிசேயனைப்போல் பிறரைப் பழிக்கிறார்கள். தங்களையோ புகழ்கிறார்கள் மற்றவர்களை அற்பமாக எண்ணுகிறார்கள் பரிசேயன் நின்று: "தேவனே! நான் பறிகாரர், அநியாயக்காரர், விபசாரக்காரர், ஆகிய மற்ற மனுஷரைப் போலவும், இந்த ஆயக்காரனைப்போலவும் இராததினால் உம்மை ஸ்தோத்திரிக்கிறேன்" என்று இயம்பியதைப்போல் இறுமாப்புக் கொள்ளுகிறார்கள். தாங்கள் சுய நிறைவு கொண்டவர்கள் என்றும், தங்களுக்குக் கடவுளும் நிகரில்லை பிறமனிதரும் நிகரில்லை என்றும் அகந்தை கொள்ளுகிறார்கள், கடவுள் தங்களுக்குத் தேவை இல்லையென்று சுய திருப்தி கொள்ளுகிறார்கள். இத்தகைய சுயநீதிச் செருக்கு கர்த்தருக்கு அருவருப்பு. ஆபாச அழுக்கு கந்தை அணிந்தவன் அகில உலகிலுள்ள அத்தனை பேரையும்விட தானே அதிக அலங்காரமான தூய ஆடை அணிந்தவன் என்று வீண் மனப்பால் குடித்துக் கொண்டிருப்பதுபோல், சுயநீதி மமதையாளர்கள் சுய திருப்தி என்னும் வீண் மனப்பால் குடித்துக் கொண்டிருக்கிறார்கள். இப்பரிசேய பரம்பரையாளருக்குக் கடவுள் கடுமையான எச்சரிப்பு விடுத்துள்ளார்; "– தேவன் பெருமையுள்ளவர்களுக்கு எதிர்த்து நிற்கிறார், தாழ்மையுள்ளவர்களுக்கோ கிருபை அளிக்கிறாரென்று சொல்லியிருக்கிறது" (யாக். 4 : 6).

கொசு விழாமல் வடிக்கட்டி ஒட்டகத்தை விழுங்குகிறவர்கள் பலர் இருக்கிறார்கள். நியாயப்பிரமாணத்தை எழுத்துத் தவறாமல் கைக்கொள்ள வேண்டும் என்று பறை சாற்றுகிறார்கள். ஆனால் நியாயப்பிரமாணத்தின் ஆவிக்குரிய கருத்தையோ மறந்துவிட்டார்கள்.



தாங்கள்தான் பரிசுத்தவான்களென்றும், மற்றவர்களெல்லாரும் அசுத்தர்களென்றும் பிறரை வெறுத்துத் தள்ளுகிற ஆன்ம ஆணவ நெஞ்சத்தினர் பலர் நம்மிடையே இருக்கிறார்கள். முற்றிலும் புனிதமான திருச்சபை என்று ஒன்று இவ்வுலகில் இருக்கமுடியாது என்பதை அவர்கள் மறந்துவிட்டார்கள் கோதுமையும், களையும் ஒன்றாக வளரும் என்றும், இவ்வுலகத்தின் முடிவுகால மட்டும் இவ்விரண்டையும் வேறுபடுத்திப் பிரிக்க முடியாதென்றும், இயேசு கிறிஸ்து இரண்டாந்தடவையாக இவ்வுலகுக்கு மீண்டும் வரும்போது அவர் தாமே களைகளைக் கோதுமையினின்று பிரித்தெடுத்து, அக்களைகளை அவியாத அக்கினியில் போடுவார் என்னும் உண்மையைப் பலர் மறந்துவிட்டார்கள். அநேகப் பரிசேயர்கள் தற்காலத்தில் எழும்பி, தாங்களே தங்களால் செய்ய முடியாத, களையைக் கோதுமையினின்று பிரித்தெடுக்கும் வேலையில் ஈடுபட்டுள்ளார்கள். இவ்வேலையை இப்பொழுது மனிதன் செய்யமுடியாது. கிறிஸ்துதாமே தமது இரண்டாம் வருகையின்போது செய்யப்போகும் வேலை இது. அதுவரை திருச்சபையில் கோதுமையோடு களைகளும் இருந்தால் நாம் ஆச்சரியப்படுவதற்கொன்றுமில்லை அநேகர் தங்கள் கண்ணிலிருக்கிற உத்திரத்தை உணராமல், தங்கள் சகோதரர் கண்ணிலிருக்கிற துரும்பை பார்த்து அதனை அகற்றுவதற்கு முயலுகிறார்கள். "இதோ உன் கண்ணில் உத்திரம் இருக்கையில் உன் சகோதரனை நோக்கி: நான் உன் கண்ணிலிருக்கும் துரும்பை எடுத்துப்போடட்டும் என்று நீ சொல்வதெப்படி? மாயக்காரனே, முன்பு உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தை எடுத்துப்போடு; பின்பு உன் சகோதரன் கண்ணிலிருக்கிற துரும்பை எடுத்துப் போட வகை பார்ப்பாய்" அநேகர் பிறரைப் பழித்துக் கூறுவதிலும் இழித்துரைப்பதிலுமே தங்கள் நேரத்தைப் போக்குகிறார்கள் அகந்தையிலெல்லாம் அதிகக் கொடிய அகந்தை இதுவாகுமன்றோ!

ஆணவத்தின் மற்றொரு வடிவம் அறிவுப் பெருமையாகும். அறிவுப் பெருமையைக் குறித்து பரிசுத்த வேதாகமம் 1 கொரிந்தியர் 8: 1,2இல் பகர்ந்துள்ளதைக் கேளுங்கள்: "..... அறிவு இறுமாப்பை உண்டாக்கும். அன்போ பக்திவிருத்தியை உண்டாக்கும். ஒருவன் தான் ஏதேனும் ஒன்றை அறிந்தவனென்று எண்ணிக் கொள்வானானால், ஒன்றையும் அறிய வேண்டியபிரகாரமாக அவன் இன்னும் அறியவில்லை." கல்லாதாரையும், அறிவீனரையும், தாழ்த்தப்பட்டோரையும் அதிக இழிவாக இத்தகைய அறிவு அகந்தையாளர்கள் கருதுகிறார்கள். நமது மனோசக்தியளவு ஆண்டவரால் அருளப்பட்டது என்பதை இத்தகைய அறிவு இறுமாப்பாளர்கள் மறந்து விடுகிறார்கள். பிறர் பாடுபட்டுச் சம்பாதித்து வைத்திருக்கும் அறிவுச் செல்வத்தைத்தான் தாங்கள் அனுபவித்து வருகிறார்கள் என்பதையும் இவர்கள் நினைத்துப் பார்ப்பதில்லை. அறிவுப் பெருமைக்கு இதுவும் ஒரு காரணமாகுமன்றோ? புனித பவுல் அடிகளார் ரோமர் 12:16இல் தீட்டியுள்ளதைக் கேளுங்கள்: "..... மேட்டிமையானவைகளைச் சிந்தியாமல், தாழ்மையானவர்களுக்கு இணங்குங்கள்; உங்களையே புத்திமான்களென்று எண்ணாதிருங்கள்."

தத்துவ நிபுணரான பிளாட்டோ என்பவர் ஒரு தடவை சில நண்பர்களுக்கு ஓர் அறையிலே விருந்து வைத்து உபசரித்தார். அவ்வறையிலே விலையேறப்பெற்ற இரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட ஒரு சொகுசிருக்கை போடப்பட்டிருந்தது. வழக்கமாக அழுக்கு ஆடையிலே காணப்படும் ஒரு நண்பர் அன்றும் அழுக்கு ஆடை அணிந்து கொண்டு அவ்வறைக்குள்ளே வந்து, அந்த அலங்காரமான சொகுசிருக்கையைக் கண்டு அதன் மேல் ஏறி நின்று, அதனை மிதித்து, "நான் பிளாட்டோவின் அகந்தையைக் காலின் கீழ் மிதிக்கிறேன்" என்றான். பிளாட்டோ சாந்தமாக, "ஆனால்



என்னைவிட நீ அதிக அகந்தையோடு அதனைக் காலின் கீழ் மிதிக்கிறாய், என் நண்பனே" என்று பதிலுரைத்தார்

அறிவுப் பெருமை, கிறிஸ்துவின் கிருபை சுவிசேஷத்திற்கு அடிக்கடி எதிரியாகத் தோன்றுகிறது காரணம் அறிவுப் பெருமை கடவுள் மீது நம்பிக்கை வையாமல், சுய நம்பிக்கையிலே அதிக கவனம் செலுத்துகிறது. நீதிமொழிகள் 3:5 கூறும் சத்தியம் யாதெனில், உன் சுய புத்தியின்மேல் சாயாமல், உன் முழு இருதயத்தோடும் கர்த்தரில் நம்பிக்கையாயிரு ஆனால் அறிவு அகந்தையாளர்களோ தங்கள் முழு இருதயத்தோடும் கர்த்தரிலே நம்பிக்கையாயிராமல், தங்கள் சுய புத்தியின்மேல் முழுவதும் சாய்ந்து விடுகிறார்கள். கடவுளை ஒரு சோதனைக் குழாயில் போட்டு, தங்கள் அறிவு ஆராய்ச்சியால் அவரை அளந்து காட்டினால் மட்டுமே தாங்கள் அவரை ஏற்றுக் கொள்வோம் என்று கூறுகிறார்கள். கடவுளை முழுவதும் நம்பி, அவரையே சார்ந்து பிழைக்க மனமற்றிருக்கிறார்கள். கல்வி, ஞானம், பகுத்தறிவுக்கும் அப்பாற்பட்டவை விசுவாசம், நம்பிக்கையாகும். உள்ளத்தையும் கடந்து நிற்பவர் கடவுள் மனித அறிவையும் கடந்து நிற்பவர் கடவுள் எனவே மனிதன் கடவுளை நம்பித்தான் ஆகவேண்டும். அவர் நம் நம்பிக்கைக்கு உரியவர். அவரை நம்பாது நாம் நம்மையே நம்பிக் கொண்டிருப்போமானால், நாம் அழிவது திண்ணம். கிறிஸ்துவையல்லாமல் நம்மால் ஒன்றும் செய்யக்கூடாது. தேவனால் எல்லாம் கூடும் ஆகவே மனிதன் தன் சுய புத்தியின்மேல் சாயாமல், தன் முழு இருதயத்தோடும் கர்த்தரில் நம்பிக்கையாயிருந்தால் வாழ்வு பெறுவான். "கர்த்தருக்குப் பயப்படுதலே ஞானத்தின் ஆரம்பம்" (சங்.111:10).

உண்மையான மதம் சிலர் நினைக்கிறபடி அறிவை மட்டுப்படுத்தாமல் பெரிதும் அறிவை வளர்த்துவிடுகிறது

சிறந்த அறிஞரான பவுல் அடிகளார்: ரோமர் 12:2 இல் பறைசாற்றியுள்ளதைக் கேளுங்கள்:" உங்கள் மனம் புதிதாகிறதினாலே மறுரூபமாகுங்கள்" குறுகிய நோக்கமும், தற்பெருமையும், ஆணவமும் கொண்டவர்களை ஆண்டவர் வெறுக்கிறார். அறிவுப் பெருமையை அவர் அருவருக்கிறார் நீதிமொழிகள் 26:12இல் கடவுள் இவ்வாறு கூறியுள்ளார் "தன் பார்வைக்கு ஞானியாயிருப்பவனைக் கண்டாயானால், அவனைப்பார்க்கிலும் மூடனைக்குறித்து அதிக நம்பிக்கையாயிருக்கலாம்."

செல்வச் செருக்கு ஆணவத்தின் மற்றொரு வடிவமாகும் அருள் செல்வத்திற்குக் காரணமாகிய ஆண்டவரிடமிருந்தே பொருள்செல்வமும் மனிதருக்குக் கிட்டுகிறது; எல்லா ஆசீர்வாதங்களுக்கும் ஊற்றும் காரணமாயிருப்பவர் கடவுளே உபாகமம் 8:18 கூறுகிறபடி, "உன் தேவனாகிய கர்த்தரை நினைப்பாயாக: அவரே ஐசுவரியத்தைச் சம்பாதிக்கிறதற்கான பெலனை உனக்குக் கொடுக்கிறவர்." தாவீது சபை அனைத்தின் கண்களுக்கு முன்பாகவும் கர்த்தருக்கு தோத்திரம் செலுத்தி சொன்னது: "எங்கள் தகப்பனாகிய இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தாவே: சதாகாலங்களிலும் தேவரீருக்கு ஸ்தோத்திரம் உண்டாகுவதாக. கர்த்தாவே மாட்சிமையும் வல்லமையும் மகிமையும் ஜெயமும் மகத்துவமும் உம்முடையவைகள்; வானத்திலும் பூமியிலும் உள்ளவைகளெல்லாம் உம்முடையவைகள்... ஐசுவரியமும் கனமும் உம்மாலே வருகிறது; தேவரீர் எல்லாவற்றையும் ஆளுகிறவர்; உம்முடைய கரத்திலே சத்துவமும் வல்லமையும் உண்டு; எவரையும் மேன்மைப்படுத்தவும் பலப்படுத்தவும் உம்முடைய கரத்தினால் ஆகும்" (1 நாளா. 29 : 10-12).

உலகப் பொருள்மீது கொண்டுள்ள அகந்தையால் ஆண்டவர் இகழப்படுகிறார் நான் என்னும் ஆணவம்



முதலிடம் பெறுகிறது. இரண்டாவது இடம் பெற வேண்டியது முதலிடம் பெற்றுவிடுகிறது நான் என்னும் அகந்தை அரியணை அமர்ந்து ஆட்சி செலுத்துகிறது ஆண்டவர் இருக்கவேண்டிய இடத்தில் மனிதன் அமர்ந்துகொள்ளப்பார்க்கிறான். தன்னையே தனக்குக் கடவுளாக்கிக் கொள்கிறான். உலகப் பொருள் அவனுக்கு ஜீவன் ஆகிவிடுகிறது மேலும் மேலும் உலகப் பொருளையும் செல்வத்தையும் திரட்டி வைக்க அல்லும் பகலும் அரும்பாடுபடுகிறான் பணப் பேராசை அவனைப்பற்றிப் பிடித்துக்கொள்கிறது. அவனுடைய இதயமெல்லாம் அவனுடைய ஐசுவரியத்தின் மீதே இருக்கிறது சங்கீதம் 62:10 விடுத்துள்ள எச்சரிப்பைக் கவனித்துக் கேளுங்கள்; "கொடுமையை நம்பாதிருங்கள் 1 தீமோத்தேயு 6:9இல் மீண்டும் வேதாகமம் விடுக்கும் எச்சரிப்பைப் பாருங்கள்: "ஐசுவரியவான்களாக விரும்புகிறவர்கள் சோதனையிலும் கண்ணியிலும், மனுஷரைக் கேட்டிலும் அழிவிலும் அமிழ்த்துகிற மதிகேடும் சேதமுமான பலவித இச்சைகளிலும் விழுகிறார்கள்."

நீ அனுபவிக்கிற எல்லா நன்மைகளும் ஆசீர் வாதங்களும் ஐசுவரியப் பொருள்களும் ஆண்ட வரிடமிருந்து வந்தவையாகும் செல்வத்தைச் சம்பாதிப் பதற்குரிய பலத்தையும் சுகத்தையும் வாழ்நாளையும் கொடுத்தவர் கர்த்தர்தாமே உலக ஆசீர்வாதங்களை அனுபவிப்பதற்கான காலத்தையும் உனக்குக் கிருபையாய் அருளிச் செய்தவர் ஆண்டவர்தான். நீ இருப்பது கர்த்தருடைய கிருபையினால்தான். பின் ஏன் அனாவசியமாய் அகந்தை கொள்கிறாய்? நீ அனுபவிக்கும் எல்லா நன்மைகளையும் உனக்கு இரக்கமாய்க் கொடுத்த கடவுளை அல்லவோ நீ இடைவிடாமல் இதய பூர்வமாய் நன்றியோடு துதித்துக் கொண்டிருக்கவேண்டும் யாக்கோபு

1:17 அறைகூவுகிறதைக் கவனியுங்கள்: "நன்மையான எந்த ஈவும் பூரணமான எந்த வரமும் பரத்திலிருந்துண்டாகி, சோதிகளின் பிதாவினிடத்திலிருந்து இறங்கிவருகிறது; அவரிடத்தில் யாதொரு மாறுதலும் யாதொரு வேற்றுமையின் நிழலுமில்லை" கடவுள் எனக்கு ஒன்றும் செய்யவில்லையென்று ஒரு மனிதனும் சொல்லமுடியாது நமக்கு இருக்கிற அத்தனை நன்மைகளும் அவர் கரத்திலிருந்து வந்தவையே வேலை செய்ய உனக்குப் பலம் கொடுத்தவர் அவர். சிந்திக்க உனக்கு ஓர் அற்புதமான மனத்தைக் கொடுத்தவர் அவர். உரிமையோடு வாழ உனக்கு ஒரு நல்ல நாட்டை ஈந்தவர் அவர். உன்னிடம் இருக்கும் எல்லாப் பொருள்களும் கர்த்தர் கிருபையாய் உனக்குத் தந்தவையேயாகும் எனவே, எல்லா மகிமையும் கனமும் ஆண்டவருக்கே உரியன பெருமை பாராட்டுவதற்கு உனக்கு என்ன இருக்கிறது?

சமூகப்பெருமை ஆணவத்தின் இன்னொரு தோற்றமாகும். சாதிப்பெருமை, இனப்பெருமை, குலப்பெருமை, நிறப்பெருமை போன்றவையெல்லாம் ஆணவத்தின் பல்வேறு அம்சங்களாகும் அணுகுண்டு யுகத்திலிருக்கும் நம்மையும் அச்சின்னஞ்சிறு அணு ஓர் அணுவளவு மனிதராக்கியுள்ளது என்று ஓர் அரசியல் மேதை இயம்பியுள்ளார். கடவுள் பட்சபாதமுள்ளவரல்லர். மனித குலத்துள் உயர்ந்த சாதி, தாழ்ந்த சாதி என்று ஒன்று இருப்பதாக மனிதர் கருதுவதுபோல் கடவுள் கருதுவதில்லை எல்லாரையும் ஒரே இரத்தத்தினால் தோன்றப் பண்ணினவர் அவர் எல்லாரும் ஒரே கடவுளால் படைக்கப்பட்ட மக்களாய் சகோதர அன்போடு வாழ வேண்டும் என்ற விரும்புகிறவர் ஆண்டவர்

மேல்சாதி, கீழ்சாதி என்னும் கருத்து பரிசுத்த வேதாகம சத்தியத்திற்கு முற்றிலும் முரண்பட்டதாகும்; கிறிஸ்தவ



நெறிக்கு முற்றிலும் மாறுபட்டதாகும். ஜெர்மனி நாட்டை நான் பார்வையிட்டபோது, ஹிட்லருக்கு மேல் சாதி என்று ஓர் உயர்ந்த சாதி இருப்பதில் நம்பிக்கை இருந்ததாக கேள்விப்பட்டேன். அத்தவறான கருத்துக் காரணமாக உலகம் எவ்வளவோ அவதியுற்றது. ஒரு பெரிய நாடு எவ்வளவோ சீரழிந்துவிட்டது

சமூகப் பெருமை யார் உள்ளத்தில் இருந்தாலும் அது பயங்கரமான பாவமேயாகும். ஆம், ஆணவம் ஒரு கொடிய விஷப் பாவம் என்று பரிசுத்த வேதாகமம் நமக்கு திட்டவட்டமாக கற்பித்துள்ளது. தேவனுடைய இராஜ்யத்திற்குள் நாம் செல்லாதபடி, ஒரு முட்டுக் கட்டைப் போல் ஆணவம் நம்மைத் தடுத்து நிறுத்திவிடும் ஆணவம் நம்மை கொன்று ஒழித்துவிடும். ஆணவமுள்ள எந்த ஆணும் அல்லது பெண்ணும் ஆண்டவருடைய இராஜ்யத்திற்குள் பிரவேசிக்க முடியாது. 'நான்' என்ற ஆணவமுள்ளோரை ஆண்டவர் அதிகமாய் அருவருக்கிறார். உன்னைக் கொல்லும் கொடிய பாவம் ஆணவம்

ஆணவம் என்ற பாவத்தை அறவே ஒழிப்பது எப்படி? இப்பயங்கர பாவத்திலிருந்து விடுதலை பெறுவது எங்ஙனம்? உன்னைக் கொன்று ஒழித்துக் கொண்டிருக்கும் இப்பயங்கர பாவமாகிய ஆணவத்தைக் குறித்து மனஸ்தாபப்பட்டு, அதைக் கண்ணீரோடு கிறிஸ்துவிடம் அறிக்கை செய். நொறுங்குண்ட நறுங்குண்ட இருதயத்தோடும் மனத்தாழ்மையோடும் கிறிஸ்துவிடம் வா உனது ஆணவம் என்னும் பாவத்திலின்று உன்னை விடுதலையாக்குவதற்காக அப்பாவத்தை சிலுவையின் மேல் சுமந்துத் தீர்த்த தேவாட்டுக்குட்டியாகிய இயேசு கிறிஸ்துவை நோக்கிப் பார் "கிறிஸ்து இயேசுவிலிருந்த சிந்தையே உங்களிலும் இருக்கக் கடவது" (பிலி. 2:5) ஆணவத்தோடு பரலோக ராஜ்யத்திற்குள்

பிரவேசிக்க ஒரு மனிதனாலும் கூடாது நான் என்ற ஆணவத்தோடு இயேசுகிறிஸ்துவிடம் சென்றால் நாம் ஏற்றுக் கொள்ளப்படமாட்டோம் உன் பாவத்தை ஒத்துக் கொண்டு அதற்காக மனஸ்தாபப்பட்டு இயேசுகிறிஸ்துவின் சிலுவைப் புண்ணியத்தின் மூலமாய் இயேசு கிறிஸ்துவிடம் பாவமன்னிப்புக்காக கெஞ்சி, மன்றாடி இயேசுகிறிஸ்துவையே உன் இரட்சிப்பாகவும், உன் இரட்சகராகவும், உன் தெய்வமாகவும் ஏற்றுக் கொள்ளும்போது நீ இரட்சிக்கப் படுவாய்

சினம் என்றால் கோபம்

# 2

# சினம்

கோபம் பாவம் பழி என்பர். பொதுவாக எல்லாரும் கோபப்படக்கூடியவர்கள். சின்னஞ்சிறு குழந்தைக்குக் கூடச் சினம் பொத்துக்கொண்டு வந்து விடுகிறது. சாப்பிடாமல் அடம் பிடிக்கிறது. சிறுவனுக்கும் கண் மூக்கு தெரியாமல் சினம் வந்து விடுகிறது குடும்பத்தினரை அவமானத்தில் ஆழ்த்தும் அளவுக்கு மனைவிக்குக் கோபம் வரம்பு கடந்து பொங்கிவிடுகிறது. அனைவருக்கும் தலை வலியை உண்டாக்கிவிடுகிறது. கணவன் சினத்தால் சீறி விழுகிறான் பசியெல்லாம் பஞ்சாய்ப் பறக்கும் அளவுக்கு குடும்பத்திலுள்ள ஒவ்வொரு அங்கத்தினரும் சினத்திற்கு இரையாகி விடுகின்றனர். இயற்கையாகக் கோபத்திற்கு விலக்கானவர்கள் யாருமே இல்லை என்று கூறிவிடலாம்.

கோபம் இதயத்தில் கொந்தளிப்பு உண்டாக்கும். குடும்பத்தில் சண்டையை உண்டாக்கும். சமூகத்தில் சச்சரவை உண்டாக்கும். நாட்டில் குழப்பத்தை உண்டாக்கும். சினத்தால் சீரழிந்த குடும்பங்களுக்கு ஓர் அளவுண்டோ! அறிவு அடக்கத்தை இழந்து சினத்திற்கு அடிமையாகும்பொழுது, அலுவல் உறவுகளும் முறிந்து போகின்றன. கோபம் என்னும் கத்தி, பொங்கும் சினம் என்னும் சாணைக்கல்லில்

கூர்மையாக்கப்பட்டு, எத்தனையோ நண்பர்களின் உறவை வெட்டி வீழ்த்திவிடுகிறது

திருச்சபை சினத்தைப் பழித்துக் கூறுகிறது பரிசுத்த வேதாகமம் கோபத்தை வெகுவாய்க் கண்டித்துக் கூறுகிறது; கோபம் பிறரைத் தாக்குகிறது; நொறுக்குகிறது; பழித்துவிடுகிறது; பழிவாங்கிவிடுகிறது; கொலை செய்து விடுகிறது கோபத்தால் உடலும் உள்ளமும் ஊனம் அடைகின்றன; துப்பாக்கி சுடுவோனையும் கொல்ல வல்லது, சுடப்படுவோனையும் கொல்ல வல்லது. அது போல், கோபம் கோபப்படுவோனையும் கொல்ல வல்லது, கோபப்படப் படுவோரையும் கொல்ல வல்லது சினம் சேர்ந்தோரையும் கொல்லும். சார்ந்தோரையும் கொல்லும்

சினம் இவ்வையகத்திற்கு வெகு வேதனையையும், வேறுபாட்டையும், அழிவையுங் கொண்டு வந்துள்ள படியால், கடவுள் சினத்தை வெகுவாய் வெறுக்கிறார் சங்கீதம் 37:8இல் நாம் வாசிக்கிறபடி, "கோபத்தை நெகிழ்ந்து, உக்கிரத்தை விட்டுவிடு; பொல்லாப்புச் செய்ய ஏதுவான எரிச்சல் உனக்கு வேண்டாம்." ஆண்டவராகிய இயேசு கோபத்தைக் கண்டித்துள்ளார். கோபம் பாவம் பழி என்று பறைசாற்றியுள்ளார். மத்தேயு 5:22இல் இயேசுநாதர் இவ்வாறு இயம்பியுள்ளார்: "நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்: தன் சகோதரனை நியாயமில்லாமல் கோபித்துக்கொள்பவன் நியாயத்தீர்ப்புக்கு ஏதுவாயிருப் பான்; தன் சகோதரனை வீணனென்று சொல்லுகிறவன் ஆலோசனைச் சங்கத் தீர்ப்புக்கு ஏதுவாயிருப்பான்." நீதிமொழிகள் 16:32இல் சாலொமோன் ஞானியார் சாற்றியுள்ளதைக் கேளுங்கள்: "பலவானைப் பார்க்கிலும் நீடிய சாந்தமுள்ளவன் உத்தமன்; பட்டணத்தைப் பிடிக்கிறவனைப் பார்க்கிலும் தன் மனதை அடக்குகிறவன் உத்தமன்" யாக்கோபு 1:19இல் பரிசுத்த வேதாகமம் மீண்டும் கூறுகிறது. "ஆகையால், என் பிரியமான சகோதரரே, யாவரும் கேட்கிறதற்குத் தீவிரமாயும், பேசுகிறதற்குப் பொறுமையாயும், கோபிக்கிறதற்குத் தாமதமாயும் இருக்கக் கடவர்கள்"



மனிதனிலுள்ள மிருக சுபாவத்தை வெளிப்படுத்தும் சினம் ஒரு கொடிய பாவமாகும் பலர் பார்வைக்கு வசீகரமாகத் தோன்றுகின்றனர். கவர்ச்சிகரமாகக் காணப்படுகின்றனர், நம்முடைய அன்புக்குரியவர்களாகத் தோன்றுகின்றனர். ஆனால், அவர்களுக்குக் கோபம் வந்து விட்டாலோ, அவர்களைப் பார்க்க அவ்வளவு அருவருப்பாகிவிடுகிறது நாகரீகமற்ற காட்டுமிராண்டி களைப்போல், வன விலங்குகளைப்போல், பகுத்தறிவற்ற மாக்களைப்போல், அம்மக்கள் மாறிவிடுகின்றனர். கட்டுக் கடங்காமல் உணர்ச்சி வெள்ளப்பெருக்கெடுக்குமிடத்து அதிக இரத்தத் துடிப்பு ஏற்பட்டு, உடல் நலமே சீரழிந்து விடுமென்று மருத்துவர்கள் அறிவித்துள்ளார்கள். ஒரு மனிதன் உணர்ச்சி வயப்படும்பொழுது அவனுடைய ஆற்றல் பெரிதும் விரயமாக்கப்படுகிறது கோபம் கோபப்படு வோரைக் கொல்லக்கூடிய பாவமாகும்.

சினம் மனிதனிலுள்ள மிருக உணர்ச்சியை வெளிப்படுத்துவதோடு கிறிஸ்தவ சாட்சியையும் கெடுத்துவிடுகிறது. பேதுரு ரோம போர்ச்சேவகர்கள்மீது சினம் கொண்டு வேலைக்காரனுடைய வலது காதற வெட்டினபோது, இயேசு சுவாமி அவனுடைய கோப உணர்ச்சியைக் கடிந்துகொண்டு, "உன் பட்டயத்தைத் திரும்ப அதின் உறையிலே போடு; பட்டயத்தை எடுக்கிற யாவரும் பட்டயத்தால் மடிந்து போவார்கள் என்றார்" (மத்.26:52). அநேகக் கிறிஸ்தவச் சாட்சிகள் மாம்ச கோபத்தால் வலுவிழந்து போயுள்ளன

தன்னை ஒரு சிறந்த கிறிஸ்தவள் என்று சொல்லிக் கொண்ட ஒரு பெண், தன்னுடைய கணவன் கிறிஸ்துவைக் கண்டுகொள்ள வேண்டுமே என்று அதிக அக்கறை கொண்டாள் தன்னுடைய குருவானவரைத் தன் கணவரோடு இரட்சிப்பைக் குறித்து பேசுமாறு செய்தாள். அக்குருவானவர் அந்த ஆடவனை அண்டி, அவனுடைய ஆத்தும இரட்சிப்பைக் குறித்து உரையாடியபொழுது, அவன் கூறின கூற்று குருவானவரைத் திடுக்கிட வைத்தது. "போதகரே, மதப்பற்றற்றவன் நான் அல்லன், ஆனால், கிறிஸ்தவ மதம் என் மனைவியைப்போல என்னையும் கோபமுள்ளவனாக்குமானால் அம்மதம் எனக்கு வேண்டாம்" என்றான்

குருவானவர் அவனுடைய மனைவியைக் கண்டு நடந்ததைக் கூறினார். அப்பெண் தன்னுடைய கோபக் குணத்தால் தன்னுடைய கணவன் கிறிஸ்துவண்டை வராதபடி தடுக்கப்பட்டுள்ளான் என்பதை அறிந்து பெரிதும் மனம் வருந்தினாள். இதயம் புண்பட்டாள் தன்னுடைய கோப சுபாவத்துக்காக மனங்கசந்து அழுது, கிறிஸ்துவிடம் மன்னிப்புக்காக கெஞ்சினாள் கிறிஸ்துதாமே தனக்குப் பொறுமைக் குணத்தைக் கொடுத்தருளுமாறு இறைஞ்சினாள் கிறிஸ்துதாமே அவளுக்குச் சாந்த குணத்தைக் கொடுத்துதவினார். பரிசுத்தாவியானவர் அவளுடைய கோப சுபாவத்தைக் கட்டுப்படுத்தி அதனை அடக்கி ஆண்டார்

சில நாள்களுக்குப் பின்னர் அவளுடைய கணவன் தூண்டில் போட்டு மீன் பிடிக்க வெளியே சென்றான். மீன் பிடித்த பின்வர், நீண்ட தூண்டில் கம்பைத் தன் தோளின் மேல் வைத்துக் கொண்டு அவன் இல்லம் ஏகியபொழுது அந்நீண்ட தூண்டில் கம்புபட்டு வீட்டிலுள்ள ஒரு விலையுயர்ந்த விளக்கு உடைந்து, சுக்கல்சுக்கலாகச் சிதறிக்



கீழே விழுந்தது. விளக்கு படாரென்று கீழே நொறுங்கி விழுந்த சத்தத்தைக் கேட்டுத் திகைத்து நின்ற கணவன் வழக்கப்படி தன் மனைவியிடமிருந்து வரும் கோப இடி ஓசையை எதிர்பார்த்தவனாய் அசைவற்று நின்றான். ஆனால் மனைவியிடமிருந்து கோப இடி ஓசை வராதது கண்டு வியப்புற்று அவள் முகத்தை உற்று நோக்கியபொழுது, அம்முகம் புன்முறுவல் பூத்துக் குலுங்க கண்டான் மனைவியின் முகத்தில் சாந்தம் தவழ்ந்தது; அமைதியும், அன்பும், பொறுமையும் பொங்கி வழிந்தன "வருந்த வேண்டாம் என் அருமைக் கணவரே, எந்தச் சிறந்த குடும்பமாயினும் விபத்து சாதாரணமாக நிகழக்கூடியதே அதற்காக கவலைப்பட வேண்டாம், என் அன்பரே" என்றாள்.

"வழக்கப்படி நீ சீறிச் சினந்து விழமாட்டாயோ?" என்று வினவினான் கணவன்

"என் அன்புள்ள கணவரே, நான் இனிக் கோபப்பட மாட்டேன். நான் இதுகாறும் உம்மிடம் கோபமாக நடந்து கொண்டதற்காக மிகமிக வருந்துகிறேன், மன்னிக்கவும் கிறிஸ்துவின் ஆவியானவர் எனக்குச் சாந்தமாக என் இதயத்தில் வாசம் பண்ணுகிறார். இனி நான் கிறிஸ்துவுக்குள் புது சிருஷ்டி; பழையவைகள் எல்லாம் ஒழிந்தன. எல்லாம் புதிதாயின" என்றாள்

சில ஞாயிறுகள் கழிந்த பின்னர் அக்கணவர் சிறந்த கிறிஸ்தவனாக அத்திருச்சபையில் சேர்ந்து, கிறிஸ்துவுக்கென்று சிறந்த திருத்தொண்டாற்றினார். அவருடைய மனைவியின் கோபம் என்னும் பாவம் நீங்கினவுடனே, அவளுடைய கிறிஸ்தவச் சாட்சிக்குப் புத்துயிர் உண்டாக்கி விட்டது

கோபம் மனதைக் குழப்பிக் கலக்கிக் கெடுத்து விடுகிறது. இதய சாந்தியைச் சிதைத்துச் சின்னாபின்னமாக்கி விடுகிறது. கோபம் இருக்கிற இடத்தில் சமாதானம் இருக்க முடியாது. மன அமைதி நிலவ முடியாது. முக ரூபம்கூட மாறிப்போய்விடும். ஆதியாகமம் 4:6இல் "கர்த்தர் காயீனை நோக்கி; உனக்கு ஏன் எரிச்சல் உண்டாயிற்று? உன் முகநாடி ஏன் வேறுபட்டது?" என்றார். ஒருவன் பொறுமையை இழக்கும்போது, அவன் மற்ற நற்பண்புகளையும் இழந்துவிட நேரிடும். கோபத்தால் உன் முகப்பொலிவு அழிந்துவிடும்; கோபத்தால் உன் புகழ் மங்கிவிடும்; கோபத்தால் உன் நல் வாழ்வு போய்விடும்; கோபத்தால் உன் கிறிஸ்தவ சாட்சி சீரழிந்துவிடும்.

கோபம் கொலைக்கு மூலமாகும். அதனால்தான் கோபம் பாவம் பழி என்று கூறுவர். காயீன் ஆபேலை கொலை செய்யும்முன் அவன்மீது கோபம் கொண்டான். எரிச்சல் அடைந்தான். கோபம் துப்பாக்கியில் குண்டு வைக்கிறது; கோபம் பழிக்குக் கத்தியைத் தீட்டுகிறது; கோபம் ஈட்டி முனைக்கு விஷம் ஊட்டுகிறது; கோபம் உயிரைக் குடித்து விடுகிறது; கோபம் குடும்பத்தைக் கெடுத்து விடுகிறது; கோபம் நாட்டை அழித்து விடுகிறது; கோபம் வாழ்க்கையைப் பாழாக்கி விடுகிறது. கோபம் அனைவரையும் கொல்லும் ஒரு கொடிய பாவம். அனாவசிய, அநியாய, அர்த்தமற்ற, வீணான, நியாயமற்ற, குற்றமுள்ள, கோபத்தையே இங்குக் குறிப்பிடுகிறோம். இக்கோபம் சுத்த மனச்சாட்சிக்கு விரோதமானது. குற்றமற்றவர்களை அநியாயமாய்த் தாக்குகிறது. பகையையும் வன்மத்தையும் மூட்டி விடுகிறது. குடும்பத்திலும் சமூகத்திலும் சண்டை சச்சரவுகளை எழுப்பிவிடுகிறது. கோபம் கொண்டோரையும் கோபத்திற்கு ஆளானோரையும் ஒருமிக்க சினத்தீ எரித்து கொளுத்தி விடுகிறது. சினம் சென்றவிடமெல்லாம் அழிவுச் சின்னமே காணப்படும். இத்தகைய அநியாய கோபத்தை ஆண்டவர் வெறுத்துத் தள்ளுகிறார்.



நம்மில் பலர் கோபம் என்னும் கொடிய பாவத்துக்கு ஆளாகியிருக்கிறோம், அடிமையாகியிருக்கிறோம். இது நம்முடைய இயற்கைச் சுபாவம் என்றும், நம்முடைய பலவீனம் என்றும், நம்முடைய பெற்றோரிடமிருந்து பெற்றுக் கொண்ட பிறவிக் குணமென்றும் சாக்குப் போக்குச் சொல்லி விடுகிறோம். இது ஒரு பலவீனம் அன்று; இது ஒரு பாவமாகும். கொடிய பாவமாகும். நம்மையும் பிறரையும் கொல்லக்கூடிய கொடிய பாவமாகும். நமது கோபத்தால் பரிசுத்தாவியானவரைப் பெரிதும் துக்கப்படுத்தி விடுகிறோம். ஆண்டவர் கோபத்தை அருவருக்கிறார்.

கோபம் பாவமானால் அப்பாவத்தைப் போக்குவது எப்படி? கோபத்தின்மீது நமக்கு வெற்றி கிடையாதா? கோபத்தை அடக்கி ஆள வழி வகையே இல்லையா? கோபப்பட்டுத்தான் தீரவேண்டுமா? கோபப்படாமல், சாந்தமாய், சமாதானமாய், அமைதியாய், பொறுமையாய் சாந்தியாய், நிம்மதியாய், அன்புற்று இன்புற்று வாழ கிறிஸ்தவ மார்க்கத்தில் இடமில்லையா? கிறிஸ்து இதற்கு உதவி செய்ய வல்லமையுள்ளவரா? அவர் நமக்கு உதவி செய்வாரா? கலிலேயாக் கடல் கடும் புயலால் சீற்றங்கொண்டு பொங்கி எழுந்தபோது, அதனை அடக்கி அமைதியுறச் செய்தவர், நம்முடைய சீற்றத்தையும், சினத்தையும் அடக்கி நாம் அமைதியோடும் பொறுமையோடும், அன்போடும் வாழச் செய்வதற்கு உதவி செய்ய வல்லவராயிருக்கிறார். அவரால் கூடாத காரியம் ஒன்றுமில்லை. அவர் எல்லாம் வல்ல இறைவன். கோபத்தை அடக்கவேண்டிய அவசியம் இல்லாவிட்டால் ஆண்டவர் சங்கீதம்37:8இல், "கோபத்தை நெகிழ்ந்து, உக்கிரத்தை விட்டுவிடு; பொல்லாப்புச் செய்ய

ஏதுவான எரிச்சல் உனக்கு வேண்டாம்" என்று கூறியிருக்கமாட்டார் மனிதன் சாந்தமாய், பொறுமையாய், அன்பாய் இருக்க வேண்டும் என்பதே ஆண்டவர் விருப்பம் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து சாந்த சொரூபியாய் இருக்கிறார் அவர் அன்பின் வடிவம் அவர் சமாதான பிரபு அவர் தம்மிடம் வேண்டுவோருக்கு கோபத்தின்மீது வெற்றிதர வல்லவராயிருக்கிறார்

கோபத்தின்மீது வெற்றி அடைவது எப்படி? முதலாவது, கோபம் ஒரு கொடிய பாவம் என்பதை உணர வேண்டும். கோபம் குடியிருக்குமிடம் பாழாய்ப் போய்விடும் என்பதை அறிய வேண்டும் கோபத்தை ஒரு சிறிய பலவீனம்தான் என்று கருதுவது தவறு அல்லது கோபம் எனது பெற்றோரிடமிருந்து நான் சுதந்தரித்துக் கொண்ட பிறவிக்குணம் என்று பாவத்தையும் பழியையும் நமது பெற்றோர் தலையில் சுமத்திவிட்டு நான் கோபப்பட்டுக் கொண்டிருப்பதும் பாவமாகும் அல்லது எப்பொழுதாவது எல்லாரும் கோபப்படத்தானே செய்கிறார்கள் நானும் ஏதோ வேளாவேளைகளில் வெகுண்டு விடுவதால் அதனால் என்ன குடிமுழுகிப் போய்விடுகிறது என்று வீண் சாக்குப் போக்குச் சொல்லி கோபத்தின் பயங்கரத்தை உணராது வாழ்வது பெரும் பாவமாகும். கோபம் கடவுளுக்கு விரோதமான கொடிய பாவம் என்பதை மறவாது, அப்பயங்கர பாவத்திற்காக மனஸ்தாபப்பட்டு, கோபத்தின் மீது வெற்றி கொள்வதற்கு விருப்பம் கொள்வதே முதற்படி.

இரண்டாவது, கோபம் என்னும் கொடிய பாவத்தைத் தயவாக மன்னித்தருளுமாறு அப்பாவத்தைக் கிறிஸ்துவிடம் அறிக்கை செய்ய வேண்டும். "தன் சகோதரனை நியாயமில்லாமல் கோபித்துக் கொள்பவன் நியாயத் தீர்ப்புக்கு ஏதுவாயிருப்பான்; தன் சகோதரனை



வீணனென்று சொல்லுகிறவன் ஆலோசனை சங்கத் தீர்ப்புக்கு ஏதுவாயிருப்பான்; மூடனே என்று சொல்லுகிறவன் எரிநரகத்துக்கு ஏதுவாயிருப்பான்" என்று இயேசு கிறிஸ்து திருவாய் மலர்ந்தருளியுள்ளதை உற்று நோக்குமிடத்து, கோபம் நம்மை இம்மையில் எரித்து பாழாக்குவதுமல்லாமல், மறுமையில் எரி நரகத்தில் தள்ளிவிடும் என்னும் சத்தியத்தை மனதில் இருத்திக் கொள்ள வேண்டும் நம்மைக் கொல்லும் கோபம் என்னும் அக்கொடிய பாவத்தின் அகோரத்தை உணர்ந்தவர்களாய், நொறுங்குண்ட இருதயத்தோடும், மனஸ்தாபக் கண்ணீரோடும் கிறிஸ்துவின் பாதத்தில் விழுந்து, பாவ மன்னிப்புக்காகவும், அப்பாவ விடுதலைக்காகவும் கெஞ்சி மன்றாட வேண்டும். "நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால், பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மைச் சுத்திகரிப்பதற்கு அவர் (இயேசு கிறிஸ்து) உண்மையும் நீதியும் உள்ளவராயிருக்கிறார்" *(1 யோவான் 1:9)*

கோபம் என்னும் பாவத்தை நாம் கிறிஸ்துவிடம் அறிக்கையிடும்போது, அவர் அப்பாவத்தை மன்னித்து கோபத்தை நீக்கி நம்மைச் சுத்திகரிக்கிறார் அது மட்டுமல்ல, சாந்த சொரூபியாகிய அவர் நமக்குச் சாந்த குணத்தைக் கொடுத்தருளுகிறார் சாந்தத்துக்கு ஊற்றும் காரணமாயிருக்கிற இயேசு கிறிஸ்துதாமே நம் இதயத்திலிருந்து சாந்தமாக, பொறுமையாக, சமாதானமாக அன்பாகப் பொங்கி வழிகிறார். முன்னால் சீற்றமும், சினமும் பொங்கி வழிந்த இதயத்திலிருந்து இப்பொழுது சாந்தமும் அன்பும் பொங்கி வழிகின்றன முன்பு, முன் கோபத்தால் எத்தனையோ மனிதரையும் குடும்பங்களையும் நாசமாக்கிய நாம், இப்பொழுது நமது பொறுமைக் குணத்தால் எத்தனையோ மனிதரையும் குடும்பங்களையும் வாழ வைக்கிறோம்

எத்தனையோ பேருக்கு ஆசீர்வாதமாக வாழ்கிறோம் முன்னர் எத்தனையோ பேரைச் சினத் தீயால் சுட்டெரித்த நாக்கு இப்பொழுது எத்தனையோ பேருக்கு ஆறுதலளிக்கிறது எத்தனையோ ஆத்துமாக்கள் கிறிஸ்துவைத் துதிப்பதற்கு ஏதுவாயிருக்கிறது. வெகுண்டு பிறரைத் துன்புறுத்திய கைகள் இப்பொழுது பிறருக்குப் பணி செய்யும் கைகளாக மாறி விடுகின்றன. சிவந்து மக்களுக்குத் தீமை செய்ய விரைந்து சென்ற கால்கள், இப்பொழுது பிறமக்களுக்கு நன்மை செய்யச் சுற்றித் திரிகின்றன சினம் பொங்கிய இடத்திலிருந்து இப்பொழுது சாந்தம் பொங்குகிறது. "சாந்த குணமுள்ளவர்கள் பாக்கியவான்கள்." ஆண்டவர் கூறியுள்ளபடி, "அவர்கள் பூமியைச் சுதந்தரித்துக் கொள்ளுவார்கள்."

பேதுரு பரிசுத்தாவியின் அபிஷேகத்தைப் பெறுமுன் வெகுண்டார், வெட்டினார், மறுதலித்தார். ஆனால் அவர் கிறிஸ்துவின் ஆவியைப் பெந்தெகொஸ்தே நாளிலே பெற்றதிலிருந்து மீண்டும் ஒரு தடவையாவது அவர் நியாய மில்லாமல் கோபித்ததில்லை. கிறிஸ்துவை அவர் அதன் பின் மறுதலித்ததில்லை. அவருடைய நாவு கிறிஸ்துவை மகிமைப் படுத்தினது. அவருடைய கை அநேகரை கிறிஸ்துவண்டை கூட்டிச் சேர்த்தது. அவருடைய கால் கிறிஸ்துவின் சுவிசேஷத்திற்காக நாடெங்கும் சுற்றித்திரிந்தது. கிறிஸ்துவில் அன்புகூர்ந்து, கிறிஸ்துவுக்காகவே வாழ்ந்து, கிறிஸ்துவுக்காக இரத்தச் சாட்சியாய் மரித்து அநேக ஆத்துமாக்களை நித்திய பேரின்பத்திற்குள் வழி நடத்தும் கிறிஸ்துவின் கருவியாக அவர் திகழ்ந்தார் கிறிஸ்து இயேசுவால் இரட்சிக்கப்பட்டது பேதுருவைப் பலவீனப்படுத்திவிடவில்லை. உறுதியும் வல்லமையும் நிறைந்தவராகவே மாற்றிற்று.

நீயும் சாந்தகுணமுள்ளவனாகலாம் தேவ ஆவியினால் ஆளப்படுவதே சாந்தம். உனக்கும் கோபத்தின்மேல் வெற்றி



வேண்டுமா? கோபத்திலிருந்து விடுதலை வேண்டுமா? நீ சாந்த சீலனாக அநேகருக்கு ஆசீர்வாதமாக வாழ விரும்புகிறாயா? அதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. உன்னை முற்றிலுமாய்க் கிறிஸ்துவிடம் ஒப்புவித்து விடு அவரே உன் இதயத்தினின்று சாந்தமாக, சமாதானமாக, அன்பாகப் பொங்கி வழிவார்.

நியாயமாக நீதிக்காகப் படவேண்டிய கோபம் ஒன்றுண்டு என்று சத்திய வேதாகமத்தில் காண்கிறோம் பாவத்தைக் கண்டு, ஒழுக்கக்கேட்டைக் கண்டு, அநியாயத்தைக்கண்டு, அசுத்தத்தைக் கண்டு நாம் வெகுண்டு எச்சரிக்காது அவற்றைக் கண்சாடையாய் விட்டுவிடக் கூடாது தீச்செயல்களைக் கண்டு சினந்து எச்சரிக்காவிட்டால், அப்பாவப்பழி நம் தலைமேல் விழுமன்றோ? ஆகவே தேவன் அங்கீகரிக்கக் கூடியதும் நியாயமானதுமான கோபம் ஒன்றுண்டு. நமது பத்திரிகைகளிலும், புத்தகங்களிலும், படக்காட்சிகளிலும் காணப்படும் அசுத்த ஆபாசங்களைப் பார்த்து நாம் பொறுத்துக் கொண்டிராமல், அவற்றை எச்சரித்து அகற்றுவதற்கு ஆவன செய்யவேண்டும் பட்டணங்களிலும், தெருக்களிலும், வீடுகளிலும், நிறுவனங்களிலும் காணப்படும் அட்டூழியங்களை நாம் கசந்துகொண்டு, எச்சரித்து அவற்றைப் பூண்டோடு ஒழிக்க முயலவேண்டும் பாவத்தைப் பாவம் என்று எச்சரிப்பது கிறிஸ்தவனது கடமையாகும்

மூன்றாவது, நியாயமான தேவ கோபத்தைப் பற்றிப் படிக்கிறோம் ரோமர் 1:18 கூறுகிறபடி, "சத்தியத்தை அநியாயத்தினால் அடக்கிவைக்கிற மனுஷருடைய எல்லாவித அவபக்திக்கும் அநியாயத்துக்கும் விரோதமாய், தேவகோபம் வானத்திலிருந்து வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது" மீண்டும் பரிசுத்த வேதாகமம் கொலோசெயர் 3:6இல் அறை

கூறியுள்ளதைக் கேளுங்கள்: "இவைகளின் பொருட்டே கீழ்ப்படியாமையின் பிள்ளைகள்மேல் தேவ கோபாக்கினை வரும்" கடவுள் பரிசுத்தமுள்ளவர், நீதி நியாயமுள்ளவர், அசுத்தத்தைப் பார்க்கமுடியாதபடி அவருடைய கண்கள் அவ்வளவு பரிசுத்தமாயிருக்கின்றன. அசுத்தம் எதிர்ப் படுமிடத்து, அவருடைய பரிசுத்தம் அந்த அசுத்தத்தைப் பார்க்க முடியாதபடி கோபப்படுகிறது அவர் பாவத்தின்மீது கோபம் கொள்கிறார் பாவம் அவருக்கு ஒருக்காலும் பிடிக்காது. பாவம் அவருக்கு அருவருப்பு

பாவிகள் தங்கள் பாவத்தைக் குறித்து மனஸ்தாபப் பட்டு, அவற்றைவிட்டுத் திரும்பி, தம் பாவத்திற்காக சிலுவையிலறையுண்ட இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து அவரைத் தங்கள் சொந்த இரட்சகராக ஏற்றுக் கொள்ளாமலிருக்கும்போது தேவ கோபாக்கினைக் குள்ளானவர்களாயிருக்கிறார்கள்

கிறிஸ்து இயேசுவை தங்கள் சொந்த இரட்சகராக ஏற்றுக்கொள்ளாத பாவிகளுக்கு விரோதமாய்த் தேவ கோபாக்கினை பற்றி எரியப்போகும் நியாயத்தீர்ப்பு நாள் வருகிறது அவரை நீ விசுவாசித்து ஏற்றுக்கொள்ளாவிட்டால் அவர் உனக்கு விரோதமாக ". என்னைவிட்டு பிசாசுக்காகவும் அவன் தூதர்களுக்காகவும் ஆயத்தம் பண்ணப்பட்டிருக்கிற நித்திய அக்கினியிலே போங்கள்" என்பார்

# 3

# பொறாமை

பொறாமையும் பகையும் மனிதனைப் பாழ்படுத்தி அழிவுக்குட்படுத்தும் பொறாமை குடும்பங்களை நாசம் பண்ணும் சபைகளைச் சீரழித்துவிடும். பொறாமை நண்பர் களை விரட்டியடித்துவிடும். பொறாமை நம் அலுவலைக் குழப்பிவிடும். பொறாமை நமது ஆன்மாவையும் நம்மையும் கொன்றொழித்துவிடும். யோபு 5:2இல் நாம் வாசிக்கிறபடி., "கோபம் நிர்மூடனைக் கொல்லும்: பொறாமை புத்தியில்லாதவனை அதம் பண்ணும்."

பொறாமையினால் ஒரு மனிதன் தன்னைத்தானே கொன்றுவிட்ட வரலாற்றைப்பற்றி, கிரேக்க கதை ஒன்று விவரம் தெரிவித்துள்ளது ஒரு விளையாட்டு வீரனுக்குக் கௌரவம் அளிப்பதற்காக அப்பட்டணத்தார் அவனுக்கோர் உருவச் சிலை அமைத்தார்கள். இதைக்கண்ட இன்னொரு விளையாட்டு வீரனுக்குப் பொறாமை ஏற்பட்டது தனக்கு எதிர் போட்டியிட்டு விளையாடும் அவ்விளையாட்டு வீரனின் உருவச்சிலையை எப்படியாவது அகற்றி ஒழித்துவிட வேண்டுமென்று இப்பொறாமைக்காரன் கங்கணம் கட்டினான். ஒவ்வொரு நாள் இரவிலும் யாருக்கும் தெரியாமல் இரகசியமாகத் தன்னால் முடிந்த மட்டும்

உளிக்கொண்டு அவ்வுருவச் சிலையின் அடிப் பாகத்தை வெட்டிக்கொண்டு வந்தான். இறுதியில் ஒரு நாள் தான் எண்ணியதைப் பூர்த்தி செய்து விட்டான். அந்த உருவச்சிலை விழுந்தது. ஆனால் அந்த உருவச்சிலையை வெட்டிக் கொண்டிருந்தவன் மீதே விழுந்துவிட்டது. பொறாமைக் காரன் அவ்விடத்தில் தானே செத்து மடிந்து விட்டான். அவனுடைய பொறாமையே அவனுடைய உயிருக்கு உலை வைத்துவிட்டது. பொறாமை பொறாமைக்காரரைக் கொன்றுவிடும்.

மனநோய் மருத்துவரைவிடச் சிறந்த ஒப்பற்ற ஆலோசனை தரவல்ல சத்திய வேதாகமம் இயம்புவதைக் கேளுங்கள்: "ஒருவன் ஐசுவரியவானாகி, அவன் வீட்டின் மகிமை பெரும்போது, நீ பயப்படாதே" *(சங்.49:16)*. ஒருவன் செல்வம் மிகுந்தவனாகும்போது அவன்மீது பொறாமை கொள்ளவேண்டியதில்லை அவ்வாறு பொறாமை கொள்வதால் நமக்கு ஒரு பைசாகூட கிடைக்காது. வெறும் பொறாமையால் நமது பணம் அதிகரிக்காது. ஆனால் அப்பொறாமையால் நமது ஆன்மா அழிந்துவிடும் பணக்காரர்களின்மீது நாம் பொறாமை கொள்வதற்கு அவசியமே இல்லை. அதற்குக் காரணத்தையும் பரிசுத்த வேதாகமம் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளது. "ஐசுவரியவான் மரிக்கும்போது ஒன்றும் கொண்டு போவதில்லை; அவன் மகிமை அவனைப் பின்பற்றி செல்லுவதுமில்லை"*(சங்.49:17)*

பொறாமைக்காரன் பிறருடைய வாழ்வைக்கண்டு மனம் புழுங்குகிறான். பிறருடைய வாழ்வைத் தன்னுடைய தாழ்வாகக் கருதுகிறான். பிறருடைய முன்னேற்றத்தைத் தன்னுடைய தாழ்நிலையாகக் கருதுகிறான் பிறருடைய வெற்றியைத் தன் தோல்வியாக எண்ணுகிறான். பிறருடைய



ஆசீர்வாதத்தைத் தன் சாபமாக எண்ணுகிறான் பிறருடைய ஆக்கத்தைத் தன் அழிவாக எண்ணுகிறான். இப் பொறாமையே அவனை அடியோடு அழித்துவிடுகிறது பொறாமையால் முன்னேறியவர்களை நான் ஒருக்காலும் கண்டதில்லை. ஆனால் பொறாமையால் சீரழிந்தவர்களைக் கண்டிருக்கிறேன். உனக்குள் பொறாமை வந்துவிட்டால்., நீ பூரண மனிதனாக இருக்கமுடியாது. பொறாமை எப்படியாவது உன் உருவைக் குலைத்துவிடும். உன் அழகைச் சிதைத்துவிடும், உன் குணாதிசயத்தைக் குறைத்து விடும் உன் பண்பைப் பாழாக்கிவிடும்; உன் உடலையே உருக்கிவிடும் உன் எலும்பைக்கூட உருக்கிவிடும் என்று வேதாகமம் செப்புகிறது. "சொஸ்தமனம் உடலுக்கு ஜீவன்; பொறாமையோ எலும்புருக்கி"*(நீதி. 14:30)*. பொறாமை ஒருக்காலும் நமக்கு நல்வாழ்வு தராது. பொறாமை பெரும் துன்பம் விளைவிக்கும், பெரும் துக்கம் தரும் பெரும் வேதனை உண்டாக்கும் பொறாமையால் நமக்கும் நன்மையில்லை, பிறருக்கும் நன்மையில்லை இரண்டு பேருக்கும் தீமையே விளையும். அழிவே உண்டாகும்.

பொறாமை மற்றவர்களை அநியாயமாய்த் தாக்குகிறது மற்றவர்களுக்கு அநியாயமாய் நஷ்டம் விளைவிக்கிறது அதனால் தமக்கும் லாபமில்லை. பிறருக்கும் லாபமில்லை பிறருக்கு நஷ்டம் விளைவிப்பதில் பொறாமை பெரு மகிழ்ச்சி அடைகிறது

ஒரு பூஞ்செடி முள்செடியைப் பார்த்து: "நீ உன் அருகே வருகிறவர்களின் ஆடைகளின்மீது ஏன் அவ்வளவு பொறாமை கொள்கிறாய்? அந்த ஆடைகளால் உனக்கு பயன் என்ன?"என்று கேட்டது அதற்கு விடையாக முள் செடி இவ்வாறு கூறினது: "எனக்கு அந்த ஆடைகளால் பயன் ஏதுமில்லை. அந்த ஆடைகளை நான் அணிந்து

கொள்ளவும் விருப்பமில்லை. ஆனால் அந்த ஆடைகளை யெல்லாம் கிழித்து விடுவதே எனக்கு ஆசை"

இந்த முள்செடியைப்போலவே பொறாமைக்காரரும் பிறரைத் துன்புறுத்தி அழிப்பதையே தங்கள் பேரின்பமாகக் கருதுகிறார்கள் தங்களுக்கு எவ்வித ஆதாயம் வரா விட்டாலும் பரவாயில்லை, பிறர் தாழ்வடைந்து சின்னா பின்னமாகச் சிதைந்து போக வேண்டுமென்பதே இவர்களுடைய சிந்தையாகும் இது சாத்தானின் சிந்தை யாகும். ஆதாம் ஏவாளின் நல்வாழ்வைக் கண்டு சகிக்க முடியாத சாத்தான் அவர்களைப் பாழாக்குவதில் மனம் மகிழ்ந்தான் அப்பொறாமையால் அவனும் பாழானான் பொறாமை கொள்ளும் மனிதனும் பாழாவான் ஆண்டவர் பொறாமையை அருவருக்கிறார். ஞானிகளும் இப் பொறாமையைக் கண்டித்துரைத்துள்ளார்கள்

சாலொமோன் கூறியுள்ளதைக் கேளுங்கள்: "உக்கிரம் கொடுமையுள்ளது, கோபம் நிஷ்டூரமுள்ளது; பொறாமை யோவென்றால், அதற்கு முன்னிற்கத்தக்கவன் யார்?" *(நீதி.27:4)*

பரிசுத்த பவுல் கூறியுள்ளதைக் கேளுங்கள்; "வீண் புகழ்ச்சியை விரும்பாமலும், ஒருவரையொருவர் கோபமூட்டாமலும், ஒருவர்மேல் ஒருவர் பொறாமை கொள்ளாமலும் இருக்கக்கடவோம்" *(கலா 5:26)*

பரிசுத்த யாக்கோபு கூறியுள்ளதைக் கேளுங்கள்; "வைராக்கியமும் விரோதமும் எங்கே உண்டோ, அங்கே கலகமும் சகல துர்ச்செய்கைகளுமுண்டு" *(யாக். 3:16)*

பிரான்ஸிஸ் பேக்கன் இவ்வாறு கூறியுள்ளார்: "தன்னுடைய சொந்த அலுவலில் ஈடுபட்டு அனாவசியமாக பிறருடைய காரியங்களில் தலையிடாமல் இருக்கிறவர்கள் பொறாமை என்னும் சோதனையிலிருந்து எளிதில் தப்பித்துக் கொள்ளலாம் ஆனால் தன் காரியத்தை விட்டு விட்டு பிறர் காரியங்களில் பொறாமையோடு ஈடுபடுகிறவர்கள் இப்பயங்கர சோதனைக்கு தப்பிக்கொள்வது அரிது"



கோரேஸ் என்பவர் பின்வருமாறு உரைத்துள்ளார்: "சிஸிலியர்களைப் பொறாமையைப்போல் சித்திரவதை செய்வது வேறேதுமில்லை"

கோரேஸ் என்பவர் மீண்டும் உரைத்துள்ளார்: "பொறாமைக்காரன் மற்றவர்களுடைய வாழ்வைக் கண்டு, ஆக்கத்தைக்கண்டு, முன்னேற்றத்தைக் கண்டு, உயர்வைக் கண்டு பொறாமையால் பெருமூச்சுவிட்டு, மெலிந்து சீரழிந்து போகிறான்"

சாமுவேல் ஜான்சன் இவ்வாறு பகர்ந்துள்ளார், "தூண்டுவாரின்றியே சீறிச் சினந்து பொங்கி வழிவது பொறாமை. அது பிறர் வாழ்வைச் சகிக்காது; அது அமைதியாயிராது; அது சேர்ந்தோரைச் சின்னாபின்னமாய்ச் சிதைத்துவிடும்."

பெட்ரோனியஸ் பகர்ந்துள்ளதைக் கேளுங்கள்; "புலவர்கள் குறிப்பிடுவது பிணம் தின்னிக் கழுகு என்னும் பறவையை அல்ல; அதைவிடக் கொடிய கொல்லும் தன்மையுள்ள மனிதனை உயிரோடு தின்னவல்ல பொறாமையையே பேராசையையே"

பரிசுத்த வேதாகமச் சத்தியத்தின்படி பொறாமை நமது இயற்கைச் சுபாவமாகும் "உங்களுக்குள்ளே யுத்தங்களும் சண்டைகளும் எதினாலே வருகிறது; உங்கள் அவயவங்களில் போர் செய்கிற இச்சைகளினாலல்லவா? நீங்கள் இச்சித்தும்

உங்களுக்குக் கிடைக்கவில்லை; நீங்கள் கொலைசெய்தும் பொறாமையுள்ளவர்களாயிருந்தும் அடையக்கூடாமற் போகிறீர்கள்; நீங்கள் சண்டையும் யுத்தமும் பண்ணியும், நீங்கள் விண்ணப்பம்பண்ணாமலிருக்கிறதினாலே, உங்களுக்குச் சித்திக்கிறதில்லை...நம்மில் வாசமாயிருக்கிற ஆவியானவர் நம்மிடத்தில் வைராக்கிய வாஞ்சையாயிருக்கிறாரென்று வேதவாக்கியம் வீணாய்ச் சொல்லுகிறதென்று நினைக்கிறீர்களா?"(யாக்.4:1,2,5). காயீன் ஆபேல் மீது பொறாமை கொண்டான். இப்பொறாமை காயீன் உள்ளத்தில் எரிச்சலை உண்டாக்கியது. அவன் முகநாடி வேறுபட்டது. பொறாமையால் காயீன் ஆபேலைக் கொன்றான். காயீன் இவ்வாறு ஆபேல்மீது பொறாமை கொள்வதற்கு நியாயமே இல்லை. இவ்வாறு பிறர் மீது பொறாமை கொள்வதற்கு நமக்கு என்ன நியாயம் இருக்கிறது? பொறாமை கொள்வதற்கு அவசியமே இல்லை. பூந்தோட்டத்தில் களைகள் இயற்கையாக முளைத்தெழும்புவதுபோல், மனந்திரும்பி இயேசு கிறிஸ்துவுக்குள் மறுபிறப்படையாத இதயங்களில் பொறாமைபோன்ற பாவங்கள் இயற்கையாகவே முளைத்தெழும்பிவிடுகிறது.

யோசேப்பின் சகோதரர்கள் யோசேப்பின்மீது பொறாமைகொண்டு, அவனை எகிப்திய வியாபாரிகளுக்கு விற்றுப்போட்டார்கள். இப்பொறாமை யோசேப்பின் சகோதரர்களுக்குத் தீமையை விளைவித்ததே தவிர, யோசேப்பின் சிறப்பு இதனால் பாதிக்கப்படவில்லை. எனவே யார்மீது பொறாமை கொள்ளுகிறோமோ அவர்களைக் காட்டிலும் பொறாமைப்படுகிறவர்களே பொறாமையால் பெரிதும் பாதிக்கப்படுகிறார்கள். எறிந்தவனிடமே திரும்பிவரும் சக்கரப்படை ஆயுதம்போல், பொறாமை தன்னை உபயோகிப்பவர்களையே மீண்டும் வந்து சேர்ந்து தாக்கி நிற்கும்.



ஆமான் மொர்தெகாய் மீது பொறாமை கொண்டு அவனைக் கொன்றொழித்துவிடத் திட்டமிட்டான். அவனைக் கொல்லுவதற்கென்று ஒரு தூக்கு மரத்தை ஆயத்தம் பண்ணினான். ஆனால் அப்பொறாமை ஆமானையே கொன்று போட்டது. "ஆமான் மொர்தெகாய்க்கு ஆயத்தம் பண்ணின தூக்குமரத்தில் ஆமானையே தூக்கிப் போட்டார்கள்." (எஸ்தர் 7:10)

உங்களில் எத்தனைப்பேர் நீங்கள் பிறருக்கு ஆயத்தம் பண்ணின தூக்குமரத்தில் நீங்களே தூக்குப் போடப் பட்டீர்கள்? பொறாமை காரணமாகப் பிறருக்கு வெட்டிய குழியில் தாங்களே விழுந்து மாண்டு போனவர்கள் ஏராளம்.

நமது வீடுகளிலும் நாடுகளிலும் இதற்கு எண்ணிறந்த சான்றுகள் உள. பொறாமை கொண்ட எந்த மனிதனாவது உண்மையாகவே மனமகிழ்ச்சியாய் இருந்ததுண்டா என்று வினவுகிறேன். பொறாமை மன நிம்மதியைக் குலைத்துப் போடும். பொறாமைப்படுகிறவனைப் படுகுழியில் தள்ளிவிடும். எப்பொழுது பொறாமை என்னும் பாவத்தில் வீழ்கிறோமோ, அப்பொழுதே நம் ஆன்மா செத்துவிடும்.

பொறாமை ஏன் இவ்வளவு கொடிய பாவமாக இருக்கிறது? கடவுள் ஏன் பொறாமையை இவ்வளவு கசந்து வெறுத்துத் தள்ள வேண்டும்? பொறாமையின் பயங்கரம் கடவுளுக்குத் தெரியும். பொறாமை காரணமாக எவ்வளவு அழிவு ஏற்படும் என்பதை கடவுள் அறிவார். நமது நல்வாழ்வைக் கருதுகிற ஆண்டவர் பொறாமையை வெறுக்கிறார். நமது ஆத்துமா வாழ்கிறதுபோல எல்லாவற்றிலும் வாழ்ந்து சுகமாயிருக்கவேண்டுமென்பதே ஆண்டவரது சித்தம். "பிரியமானவனே, உன் ஆத்துமா வாழ்கிறதுபோல நீ எல்லாவற்றிலும் வாழ்ந்து சுகமாயிருக்கும்படி வேண்டுகிறேன்" (3 யோவான் 1:2)

நன்றாக இருந்த லூசிபர் என்ற தேவதூதன் அனாவசியமாக நியாயமின்றி ஆண்டவர்மீது பொறாமை கொண்டான். உடனே அவன் சாத்தான் ஆனான் அப்பொறாமை அவனையே அழித்துவிட்டது. எனவே, தம்சிருஷ்டியை அழிக்கும் பொறாமைமீது ஆண்டவர் பிரியம் கொள்வாரோ? அவர் அதனை அருவருக்கிறார் கிறிஸ்துவைச் சிலுவையில் அறைந்து கொள்வதற்குக் காரணமாயிருந்த பாவங்களுள் ஒன்று பொறாமை ஆகும் "பொறாமையினாலே பிரதான ஆசாரியர்கள் அவரை ஒப்புக் கொடுத்தார்களென்று பிலாத்து அறிந்தான்." (மாற்கு 15:9)

இயேசு கிறிஸ்துவின் செல்வாக்கு அதிகரித்து வருவதைப்பற்றி பரிசேயரும் சதுசேயரும் பொறாமை அடைந்தனர். மக்கள் திரள்திரளாக இயேசு கிறிஸ்துவண்டை வந்து அவருடைய அமுத மொழிகளைக் கேட்டு, அவரால் சுகம் பெற்று, நன்மை பெற்று வருவதைப்பற்றியும், இயேசுவின் புகழ் நாடெங்கும் வெகு விரைவில் பரவி வருவதைப் பற்றியும் அவர்கள் பொறாமை கொண்டார்கள் மக்கள் இயேசு கிறிஸ்துவை இராஜாவாக்க முயன்றபோது, அவர்களின் பொறாமை கொழுந்து விட்டெரிந்தது. வர வர இயேசு கிறிஸ்துவின் மேன்மையும் மகிமையும் நாடெங்கும் காட்டுத் தீ போல் பரவிச் செல்வதைக்கண்டு, அவர்களால் சகிக்க முடியவில்லை உலகம் முழுவதும் இயேசுவைப் பின்சென்று விட்டதே என்று பொறாமைப்பட்டார்கள் அவர்கள் நெஞ்சில் மூண்டெழுந்த பொறாமைத் தீயை அவர்களால் அடக்கிவைக்க முடியவில்லை. இயேசுவைக் கொன்றொழித்துவிட சதி செய்தார்கள் பொதுவாக பரிசேயரும் சதுசேயரும் ஒருவருக்கொருவர் இணங்காதவர்களாயிருந்தும், இருவகுப்பினருக்கும் இயேசுவின் மீதிருந்த பொறாமை காரணமாக, அவ்விரு வகுப்பாரும் ஒன்று சேர்ந்து இயேசுவைக் கொன்று விட இணங்கினார்கள்



இருவகுப்பாரும் பொறாமையால் நிதானத்தை இழந்தார்கள், நியாயத்தை மறந்தார்கள், நீதியைக் கசந்தார்கள், தங்களுக்குள்ளிருந்த வேற்றுமை உணர்ச்சிகளைக்கூட ஒதுக்கி வைத்து விட்டார்கள். பொறாமைக்கு அடிமையானார்கள். பொறாமை அவர்கள் புத்தியைக் கொன்று விட்டது, அவர்கள் ஆன்மாவை அழித்துவிட்டது. அநியாயமாக இயேசுவைக் கொல்வதற்கு இருவகுப்பாரும் கூடிக்கொண்டார்கள். பொறாமையின் கொடுமைதான் என்னே! என்னே!

பொறாமை ஆன்ம சுகத்தை அறவே ஒழித்துவிடும்; ஜென்ம பாவத்தின் பயங்கர அறிகுறிகளுள் ஒன்று பொறாமை. இப்பாவம் மனுக்குலமனைத்தையும் ஆட்கொண்டுள்ளது. இயற்கையாகவே எல்லா மனிதனுக்குள்ளும் பொறாமைப்படும் சுபாவம் இருக்கத்தான் செய்கிறது. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வகையான பொறாமை உண்டு. இயேசு கிறிஸ்துவைத் தன் நாயகராக ஏற்றுக்கொள்ளுமுன் பவுலுக்கு ஆவிக்குரிய பொறாமை இருந்தது. புதிதாகப் புகழ்பெற்றுப் புனிதமாய் நடந்த கிறிஸ்தவர்களைக் கண்டு பவுல் பொறாமை கொண்டான். அப்பொறாமை நெருப்பை அவன் நெஞ்சத்துக்குள் அடக்கி வைத்திருக்க முடியவில்லை. கிறிஸ்தவ இனத்தையே இப்பூமியிலிருந்து பூண்டோடு அழித்துவிட வேண்டுமென்று சீறிச் சினந்து பொங்கி எழுந்தான். "சவுல் என்பவன் இன்னுங் கர்த்தருடைய சீஷரைப் பயமுறுத்திக் கொலை செய்யும்படி சீறிப் பிரதான ஆசாரியரிடத்துக்குப் போய், இந்த மார்க்கத்தாராகிய புருஷரையாகிலும் ஸ்திரீகளையாகிலும் தான் கண்டு பிடித்தால் அவர்களைக் கட்டி எருசலேமுக்குக் கொண்டு வரும்படி தமஸ்குவிலுள்ள ஜெப ஆலயங்களுக்கு நிருபங்களைக் கேட்டு வாங்கினான். ஸ்தேவான் என்னும் கிறிஸ்தவ சீஷன் கல்லெறிந்து கொல்லப்படுவதற்கு ஒரு

காரணமாக இருந்தவன் பவுல். 'ஸ்தேவான் கல்லெறியுண்டு சாகும்போது அவனுடைய முகத்தில் ஓர் ஆச்சரியமான மகிமையின் ஒளி பிரகாசித்ததைப் பவுல் கண்டான். அதே ஒளி தமஸ்குவுக்குச் செல்லும் பாதையில் அவனைச் சுற்றிப் பிரகாசித்தது. ஸ்தேவானை ஆட்கொண்டிருந்த இயேசு கிறிஸ்து பவுலையும் ஆட்கொண்டார். இயேசுவிடம் பொறாமையில்லை. அவரிடம் அன்பு தான் உண்டு. அந்த அன்பு அன்றிலிருந்து பவுலை ஆட்கொண்டது. பவுல் கிறிஸ்துவுக்குள் புது சிருஷ்டியானான். பழைய பொறாமை போன்ற பாவங்களெல்லாம் ஒழிந்து போயின. எல்லாம் கிறிஸ்துவுக்குள் புதிதாயின. கிறிஸ்துவே அவனுக்குள்ளிருந்து அன்பாகப் பொங்கினார். பேரின்பமாகப் பொங்கினார் பவுல் அதன் பின்னர் அன்பு வடிவமான ஆண்டவர் இயேசு கிறிஸ்துவையே தன் முழு இருதயத்தோடும் சேவித்தான். தன் இருதயம் முழுவதையும் இயேசு கிறிஸ்துவுக்கு ஒப்புக் கொடுத்துவிட்டான். இயேசுவே அவனுக்கு ஞானமும், நீதியும், மீட்புமானார்

கொடிய க்ஷயரோக கிருமிகள் உன் உடலில் இருக்கின்றன என்று நீ கேள்விப்பட்டால் அவற்றை அப்புறப்படுத்துவதில் உடனடியாக ஈடுபடுவாய். அதற்காக எவ்வளவு நேரத்தை வேண்டுமானாலும் சரி எவ்வளவு பணத்தை வேண்டுமானாலும் சரி, உடனே செலவழிக்கத் தயங்கமாட்டாய். காரணம் உன் உடலுள் புகுந்துவிட்ட க்ஷயரோக கிருமிகள் உன்னைக் கொன்று போடும் என்பதை அறிவாய். அதைப்போல் உனக்குள் புகுந்திருக்கும் பொறாமை என்னும் பேய்க்குணம் உன் சரீரத்தை மட்டுமல்ல, உன் ஆத்துமாவையும் கொன்றொழித்துவிடும் என்பதை மறவாதே. இவ்வளவு கொடிய கொல்லும் தன்மையுள்ள பொறாமை உனக்குள் இருந்தும், நீ அதனை அகற்றுவதற்கு முயலாது சும்மா இருப்பது விந்தையிலும் விந்தையே. கடவுளுடைய பார்வையில் பொறாமையும் விபச்சாரத்தைப்போல் மனிதனைக் கொல்லும் தன்மையுள்ள கொடிய பாவமே.



கலாத்தியர் நிருபத்தில் கூறப்பட்டுள்ள பதினேழு மாம்சத்தின் கிரியைகளில் ஒன்று பொறாமையாகும் இப்பொறாமை என்னும் பாவம் விபச்சாரம், வேசித்தனம், அசுத்தம், காமவிகாரம், விக்கிரகாராதனை, பில்லி சூனியம் போன்ற பாவங்களோடு சேர்ந்து அவைகளுக்குச் சமமாக வைத்து எண்ணப்படும் கொடிய பாவமாகும். மற்ற பாவங்களைவிட இப்பொறாமை என்னும் பாவம் அதிகமாகப் பரவி வேரூன்றிருத்தலைக் காணலாம் எனினும், இப்பொறாமையைப் பிரசங்க பீடங்களிலிருந்து கண்டித்துப் பேசுவதை நாம் அதிகமாகக் கேட்பதில்லை இப்பாவம் நம் நாட்டுச் சட்ட திட்டங்களால் தடை விதிக்கப்படவில்லையாயினும், இப்பாவம் கடவுளால் பெரிதும் வெறுக்கப்படுகிறது. "சகோதரரே, நீங்கள் நியாயந் தீர்க்கப்படாதபடிக்கு ஒருவருக்கொருவர் விரோதமாய் முறையிடாதிருங்கள்; இதோ, நியாயாதிபதி வாசற்படியில் நிற்கிறார்"(யாக். 5:9).

பொறாமை யாருடைய உள்ளத்திலிருக்கிறதோ அவர்கள் அகத்திலும் முகத்திலும் மன மகிழ்ச்சியும், பூரிப்பும், திருப்தியும் காண முடியாது. அமைதியையும், சாந்தி சமாதானத்தையும் பொறாமை ஒழித்துவிடும். பொறாமை காரணமாக எத்தனையோ பேருடைய வாழ்வில் கசப்பும் கொடுமையும், ஏமாற்றமும், குழப்பமும், பிணியும், துக்கமும், துன்பமும் குடிகொண்டிருப்பதைக் கண்டிருக்கிறேன். நமது வேலையையும் நாம் செவ்வனே செய்ய முடியாதபடி பொறாமை தடுத்துவிடும் ஆண்டவருக்கும் நாம் இதயப் பூர்வமாய்த் தொண்டு செய்யாதபடி நம்மை

தடைசெய்து நமக்கும் நமது நரம்பு மண்டலத்திற்கும் பெரும் நெருக்கடி நிலையை ஏற்படுத்தி, நமது சுகத்தையெல்லாம் நாசமாக்கிவிடும் இப்பொறாமை

பிற மக்களோடு கூடிய கூட்டுறவை அழித்து தெய்வத்தோடு கூடிய அன்னியோன்னிய ஐக்கியத்தையும் கெடுத்து தொலைத்துவிடும் இப்பாழான பொறாமை. பொறாமையுள்ளம் ஆண்டவரோடு ஒன்றித்து இணைந்து நிற்க முடியாது. நீ இதுவரை உன் இதயத்தை ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவுக்கு ஒப்புக்கொடுக்காமல் வாழ்ந்தால், அதற்கொரு காரணம் உன் நெஞ்சத்திலிருக்கும் பொறாமையாகும். பொறாமை உன்னைக் கடவுளிடமிருந்து பிரித்துவிடும். பொறாமை உன்னுள்ளத்திலிருக்கும் வரை நீ ஆண்டவரோடு ஐக்கியப்படமுடியாது. ஆண்டவர் உன்னுள்ளத்தில் வரவேண்டுமாயின் நீ உன்னுடைய பொறாமை பாவத்திற்காக மனஸ்தாபப்பட்டு, அதனை அறிக்கையிட்டு, நீ இயேசு கிறிஸ்துவின் இரக்கத்தால் இப்பொறாமை எனும் பாவமறக் கழுவி சுத்திகரிக்கப்பட வேண்டும். இவ்வாறு கிறிஸ்துவின் இரத்தத்தால், சுத்திகரிக்கப்பட்டு, சுத்தமாக்கப்பட்ட இதயத்தில் பிதாவாகிய தெய்வமும், குமாரனாகிய தெய்வமும், பரிசுத்தாவியானவராகிய தெய்வத்தின்மூலம் வாசம் பண்ணுவார். அப்பொழுது நீ கிறிஸ்துவுக்குள் புது சிருஷ்டியாவாய். அப்பொழுது பழைய மாம்சத்தின் கிரியைகளெல்லாம் ஒழிந்து போகும், எல்லாம் புதிதாகும்

கொலைகாரனின் கொடிய கோடாரியின் கூரிய முனையைக் காட்டிலும் பன்மடங்கு கூர்மையானது பொறாமை என்று ஷேக்ஸ்பியர் கூறியுள்ளார்

பொறாமை அகந்தை அரிபிளவையைப்போல் அரித்துவிடும். மனிதனைச் சமுதாயத்திலின்று பிரித்துவிடும்



அவனைத் தன்னந்தனியனாக்கிக் கொன்றுவிடும் பொறாமைக்காரன் பிறரோடு கூடிவாழ முடியாது. காரணம், பிறர் வாழ்வை அவனால் பொறுக்கமுடியாது. அவனும் வாழ மாட்டான்; பிறரையும் அவன் வாழவிட மாட்டான். அவன் ஓர் ஆன்ம குஷ்டரோகி ஆகிவிடுகிறான். அப்பொறாமை என்னும் குஷ்டரோகம் அவனை அயலாரிடமிருந்தும் பிரித்துவிடும், ஆண்டவரிடமிருந்தும் பிரித்துவிடும்

கடைசி நாள் நியாயத்தீர்ப்பில் நாம் இந்தப் பொறாமை பாவத்திற்காகவும் நியாயந்தீர்க்கப்படுவோம். இப்பாவத்தைக் குறித்தும் நாம் ஆண்டவருக்குக் கணக்கொப்புவிக்க வேண்டும். இப்பொறாமையாகிய பாவம் நம்மை நரக ஆக்கினைக்குட்படுத்திவிடும்

என்னுடைய சரீர சுகம், மனச் சமாதானம், ஆன்ம வாழ்வு இவற்றைப் பாதிக்கும் இப்பாழான பொறாமைப் பாவத்தை எங்ஙனம் விட்டுவிடுவது என்று நீங்கள் வினவலாம்

முதலாவது, உண்மையை ஒத்துக்கொள். அதாவது, உனக்குள்ளிருக்கும் பொறாமை குணத்தை நீ அறிந்தவனாய் பொறாமை உன்னிடத்தில் உண்டு என்னும் உண்மையை நீ ஒத்துக்கொள். உனது தோல்விக்காக பிறர்மீது பழி சுமத்திக் கொண்டிருக்காதே. மற்றவர்களுக்குள்ளும்தான் இப்பாவம் தலைதூக்கி நிற்கிறதே என்று நீ வீண் சாக்குப் போக்குச் சொல்லிக் கொண்டு சும்மாயிராதே. உன் குற்றத்தை நீ உணர்ந்து கொள்வதால், நீ சிறிய மனிதனாகிவிடுவாய் என்று தவறாகக் கருதாதே. உள்ளபடியே நீ உண்மையை ஒத்துக்கொள்ளும்பொழுது உன்னைப் பெரிய மனிதனாகப் பிறர் மதிப்பார்கள். எனவே நீ பாவி என்பதை முதலாவது ஒத்துக்கொள்

இரண்டாவது, உன் பாவத்தை கடவுளிடம் அறிக்கையிட்டு விட்டுவிடு; "நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால், பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மைச் சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியும் உள்ளவராயிருக்கிறார்"(யோவான் 1:9) நீ சொஸ்தமடையும்படிக்கு உன் குற்றங்களை அறிக்கையிடு (யாக் 5:16). மனந்திருந்தி பாவத்தை அறிக்கையிட்டு அதை விட்டுவிடு.

மூன்றாவது, உன்னைப் புது சிருஷ்டியாக்கும்படி கிறிஸ்துவிடம் உன்னை ஒப்புவித்துவிடு. பொறாமையை உன் சுய பலத்தால் வெல்லவே முடியாது. பவுல் இப்பாவ வெற்றியின் இரகசியத்தைக் கண்டுபிடித்தவராய், பிலிப்பியர் 4:13-இல் கூறியுள்ளதைக் கேளுங்கள்; "என்னைப் பெலப்படுத்துகிற கிறிஸ்துவினாலே எல்லாவற்றையுஞ் செய்ய எனக்குப் பெலனுண்டு." இயேசு கிறிஸ்துவை அல்லாமல் நாம் ஒன்றும் செய்யமுடியாது. இயேசு கிறிஸ்து ஒருவர் மட்டும்தான் பாவம் அற்றவர், முழுக்க முழுக்க பரிசுத்தமானவர். அவர் ஒருவரே அன்புள்ளவர். பாவச் சுபாவம் படைத்த நம்மைச் சிலுவையில் கொன்றொழித்து விட்டு, கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை நமக்கு ஜீவனாகவும், பரிசுத்தமாகவும், இரட்சிப்பாகவும், எல்லாவற்றிற்கும் எல்லாமாகவும் ஏற்றுக் கொள்ள வேண்டும். "கிறிஸ்துவுடனே கூடச் சிலுவையிலறையப்பட்டேன் இனி நான் அல்ல, கிறிஸ்துவே எனக்குள் பிழைத்திருக்கிறார்"(கலா.2:20) "கிறிஸ்துவினுடையவர்கள் தங்கள் மாம்சத்தையும் அதின் ஆசை இச்சைகளையும் சிலுவையில் அறைந்திருக்கிறார்கள்" (கலா 5:24). "ஆவியின் கனியோ, அன்பு, சந்தோஷம், சமாதானம், நீடியபொறுமை, தயவு, நற்குணம், விசுவாசம், சாந்தம், இச்சையடக்கம்: இப்படிப்பட்டவைகளுக்கு விரோதமான பிரமாணம் ஒன்றுமில்லை"(கலா 5:22,23)



நான்காவது, கிறிஸ்துவின் ஆவியானவர் உன் இதயத்தில் வந்து வாசம்பண்ணுமாறு ஆண்டவரை வருந்திக்கேள். பிதாவாகிய தெய்வம், குமாரனாகிய தெய்வம் பரிசுத்தாவியானவரின் மூலமாய் உன்னில் வாழ விடு "அப்படியே நீங்களும் உங்களைப் பாவத்திற்கு மரித்தவர்களாகவும், நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்குள் தேவனுக்கென்று பிழைத்திருக்கிறவர் களாகவும் எண்ணிக்கொள்ளுங்கள்"(ரோமர் 6:11). ஆவியின் முதற்கனி அன்பு (கலா. 5:22). அன்பு நமது இதயத்தை முற்றிலும் நிரப்பிப் பொங்கி வழியும்பொழுது அவ்விடத்தில் பொறாமை தங்கியிருக்க இடமில்லாமல் வெளியேற்றப் பட்டுவிடும். அன்புள்ள இடத்தில் பொறாமை இருக்க முடியாது. எனவே. பொறாமை நமது இதயத்திலிருந்து அகற்றப்படுவதற்கு ஒரே வழி, பரிசுத்த அன்புக்கடவுளாகிய இயேசு கிறிஸ்து நம் இதயத்தை முற்றிலும் ஆட்கொள்ள வேண்டும். நம் இதயத்தை இயேசு கிறிஸ்துவுக்கு முழுவதும் ஒப்புக் கொடுக்கும்போது, அவர் நம் இதயத்தில் தங்கி அன்பைப் பொழிவார். அப்பொழுது பொறாமை அகன்று போம். இயேசு கிறிஸ்துவாலே பொறாமையை நீ வெல்வாய். இதற்கு இயேசு கிறிஸ்துவேயன்றி வேறொரு வழியும் இல்லை எனவே உடனே உன்னை முற்றிலுமாய்க் கிறிஸ்துவிடம் ஒப்புவித்து விடு

# 4

# காமம்

பார்வைக்கு காமம் பெரும் பகட்டாகவே தோன்றும் ஆரம்பத்தில் அது அழகாகவே காட்சியளிக்கும் அதன் வெளிப்பகட்டு கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவர்ந்து நிற்கும். எடுத்த எடுப்பில்தானே அதன் ஆபாசமும், அசுத்தமும், விஷமும் கண்பார்வைக்கு எளிதில் தென்படுவதில்லை. முதற்பார்வைக்கு அந்த ஆபாசம் அழகாகவே காட்சி தரும். தொடக்கத்தில் அது வனப்பு என்னும் மாறுவேடம் தாங்கி வெளிப்படும். விரும்பத்தக்க பொலிவும், ஆசைப்படத்தக்க அழகும், இச்சிக்கத்தக்க இன்பமும், வஞ்சகமாகத் தாங்கிவரும். பார்த்த பார்வைக்கு வெறுக்கத் தக்கதாக அதில் யாதொரு ஆபாசமும் இருக்காது. காமத்தைச் சாத்தான் ஒரு வெறுக்கத்தக்க அவலட்சண தேவதையாக அல்ல, யாவரும் விரும்பத்தக்க வனப்புத் தேவதையாக, அன்புத் தேவதையாக, இன்பத் தேவதையாக அழகுபடுத்தி யாவர் கண் முன்னும் கொண்டுவந்து நிறுத்திவிடுகிறான். அந்தக் காம தேவதையின் புறத்தோற்றம் பெரும் வீரர்களையும்கூட வஞ்சித்திருக்கிறது. "என்ன புறத்தோற்றம் இது, ஓர் இயற்கையான உணர்ச்சிதானே" என்று பகுத்தறிவாளன் பகர்கிறான். "இது கடவுள் கொடுத்த



இயற்கை எழுச்சிதானே" என்று அறிஞர் அறை கூவுகின்றனர். கொஞ்சம்பொறு. சத்திய வேதாகமம் சாற்று வதைக் கேள்; "ஸ்திரீயுடனே விபசாரம் பண்ணுகிறவன் மதிகெட்டவன். அப்படிச் செய்கிறவன் தன் ஆத்துமாவைக் கெடுத்துப் போடுகிறான். வாதையையும் இலச்சையையும் அடைவான், அவன் நிந்தை ஒழியாது"(நீதி. 6:32,33).

கடவுள் காமத்தை வெறுக்கிறார். கடவுள் காமம் அற்றவர், அவர் பரிசுத்தர். அவரிடம் அசுத்தம் இல்லை. அவர்அசுத்தத்தை அருவருக்கிறவர். நாமும் பரிசுத்தமாயிருக்க வேண்டுமென்று விரும்புகிறார். அவர் அசுத்தத்தைப் பார்க்க முடியாத முற்றிலும் பரிசுத்த கண்ணர். " ஒரு ஸ்திரீயை இச்சையோடு பார்க்கிற எவனும் தன் இருதயத்தில் அவளோடு விபசாரஞ் செய்தாயிற்று"என்று சொன்னவர். அசுத்தமானதொன்றும் தம்முடைய பரிசுத்த இராஜ்யத் திற்குள் பிரவேசிக்க முடியாதென்று பறைசாற்றியுள்ளவர், இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள்தான் தேவனைத் தரிசிக்க முடியும் என்று முழங்கியுள்ளவர், பரிசுத்த தேவன் தம் மக்களும் பரிசுத்தமுள்ளவர்களாய் இருக்கவேண்டுமென்று ஆசிக்கிறவர்.

அசுத்தம், காமம், ஆபாசம், விபசாரம்., வேசித்தனம் மனிதனைப் பரிசுத்த தேவனிடமிருந்துப் பிரித்துவிடுகிறது. ஆண்டவர் எவ்வளவுதான் அன்புள்ளவராக இருந்த போதிலும், அவர் அசுத்தத்தோடே வாழத் தெரியாதவர். அசுத்தம் இருக்கும் இடத்தில் பரிசுத்த தெய்வம் வாழமுடியாது. எனவே, அசுத்தம் மனிதனைத் தேவனிடமிருந்து பிரித்துக் கொன்றுவிடுகிறது. காமம் மனிதனைக் கொல்லும் கொடிய பாவம்.

காம அசுத்தம் மனிதனைப் பாழாக்கும். குடும்பத்தைப் பாழாக்கும், தேசத்தைப் பாழாக்கும். உலகத்தைப்

*பாழாக்கும்! மனுக்குலத்தையே பாழாக்கி விட்டது! காமத்தால் சீரழிந்த மக்கள் எத்தனைபேர்! மாணவர் எத்தனைபேர்! வாலிபர் எத்தனைபேர்! ஆண்கள் எத்தனைபேர்! பெண்கள் எத்தனைபேர்! அரசர்கள் எத்தனைபேர்! வீடுகள் எத்தனையோ! நாடுகள் எத்தனையோ! காமம் கொடிய விஷம். அதால் மாண்டவர் கணக்கற்றவர்! காமம் பயங்கர பாவம். அப்பாவத்தின் சம்பளம் மரணம்.*

*மனிதரைக் கடவுளிடமிருந்து பிரித்துக் கொல்ல சாத்தான் பயன்படுத்தும் விஷ ஆயுதம் காமமே. காமச் சிற்றின்பத்தால் பேரின்பம் இழந்தோர் பலர். காமம் மனிதனை அசுத்த மிருகமாக்கிவிடும். சாத்தான் ஓர் அசுத்த மிருகமாக பரிசுத்த வேதாகமத்தில் காட்டப்பட்டுள்ளான், அந்த அசுத்த மிருகத்தால் ஆள்கொள்ளப்படுகிறவர்களும் தங்களை அறியாமலே அசுத்த மிருகமாகி விடுகிறார்கள்; அசுத்தமானதை நடப்பிக்கிறார்கள்: அசுத்தமானதை சிந்திக்கிறார்கள்;அசுத்தமானதைப் பேசுகிறார்கள்; அசுத்தமானதை வெளியிடுகிறார்கள். அசுத்த ஆபாச படங்கள் எத்தனை! ஆபாசப் புத்தகங்கள் எத்தனை! ஆபாசக் கதைகள் எத்தனை! ஆபாசப் பத்திரிக்கைகள் எத்தனை! ஆபாசப் செய்திகள் எத்தனை!ஆபாசச் சுவரொட்டிகள் எத்தனை! ஆபாசப் பாட்டுகள் எத்தனை! ஆபாசக் காட்சிகள் எத்தனை!*

*இம்மண்ணுலகமாகிய மாயாபுரிச் சந்தையில் மக்களை மயக்கி சாத்தான் விற்பனை செய்வதற்குப் பகட்டாக அழகழகாய் அடுக்கி வைத்திருக்கும் சாமான் சிற்றின்பமே. கண்ணைக்கவரும் இந்த வெளிப்பகட்டுச் சிற்றின்பச் சாமான்களை எல்லாரும் வாங்கத்தக்கதாகச் சாத்தானும் அவனுடைய தூதரும் விநோதம் விநோதமான விளம்பரங்களில்*



*ஈடுபட்டிருக்கிறார்கள். இம்மாயாபுரிச் சந்தையில் இந்தச் சரக்கு அதிகமாய் விற்பனையாகிறது. இந்தச் சரக்கை வாங்கும்போது இன்பமாகக் காட்சியளிக்கிறது. ஆனால் அனுபவித்த பின்னரோ பெரும் நரகத் துன்பத்தை அனுபவிக்க வேண்டியிருக்கிறது. பின்னால் வரும் பெருந்துன்பம் முன்னால் தெரிவதில்லை. சாத்தான் அதனை வஞ்சகமாக மறைத்து விடுகிறான். இந்தச் சரக்கை வாங்குவோரின் இருதயம் பாழ்படுவதையும் அன்னாரின் வீடும் நாடும் பாழ்படுவதையும் பற்றிச் சாத்தான் அவர்களுக்கு முன்னரே தெரிவிப்பதில்லை. தொடக்கத்தில் பேரின்பமாகத்தென்படும் இதே சிற்றின்பம் பின்னர் கொடிய வேதனையாக மாறிவிடும். அதனை அனுபவிக்கும் சரீரமும், ஆத்துமாவும் பெரும் அழிவுக்குட்படும்.*

*அசுத்த வாழ்வில் ஆழ்ந்திருக்கும் ஆள்களைக் கேட்டுப் பாருங்கள். தங்கள் மானத்தை விலைக்கு விற்பனை செய்யும் விலை மாதரை வேண்டுமானால் விசாரித்துப் பாருங்கள் அடிக்கடி விவாகரத்து செய்துவிட்டு வெவ்வேறு கணவர்களை மணந்து கொள்ளும் பெண்களை வேண்டுமானால் கேட்டுப் பாருங்கள். சிற்றின்பம் உண்மையான பேரின்ப வாழ்வு தர முடியுமா என்று இத்தகையோரை விசாரித்துப் பாருங்கள். அவர்கள் தாங்கள் அனுபவிக்கும் நரக வேதனையைப்பற்றி தங்கள் அனுபவச் சாட்சியைப் பகருவார்கள். அவர்கள் சமாதானம் இழந்து, சாந்தி இழந்து,மனஅமைதி இழந்து, உடல் நலம் இழந்து, ஆன்ம மகிழ்ச்சி இழந்து, பேரின்பம் இழந்து, கடவுளையும் இழந்து தத்தளிப்பதைக் கண்ணுறலாம். மருத்துவமனைகளிலும், சிகிச்சை சாலைகளிலும் தாங்க முடியாத நோயுற்று, தீர்க்க முடியாத பிணியுற்று அவதிப்படும் ஆள்களை ஆராய்ந்து பாருங்கள். அதன் காரணம் யாதென்று அவர்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள், ஏழாம் கற்பனையை மீறியதினால்தான் அவர்கள் இந்தப்*

பாடுபட வேண்டியதிருக்கிறதென்று உங்களுக்குச் சொல்லுவார்கள். அவர்கள் ஏகோபித்து: "பாவத்தின் சம்பளம் மரணம்"(ரோமர் 6:23) என்று கூறுவார்கள்

நரகத்தின் பூதகணம் இம்மண்ணுலக மக்களின் ஆத்துமாக்களை அழிப்பதற்கு அதிகமாக பயன்படுத்தும் கருவி காம இச்சையே. இவ்வுலகம் படைக்கப்பட்டதிலிருந்து இது காறும் சாத்தான் அதிக வெற்றியோடு பயன்படுத்தி வரும் ஆயுதம் இதுதான். இந்த ஆயுதம் ஆரம்பத்தில் மனிதரை வஞ்சிக்கத்தக்கதாக அதிக வனப்புடன் தோன்றும் இறுதியிலோ, நிச்சயமாய் அழிவையே தந்து நிற்கும். அதன் அழகைவிட அதன் அழிவு பெரிது. அதன் அழகைக் காட்டிலும் அதன் அழிவு அதிக நிச்சயம் அது செல்லுமிடமெல்லாம் அழகு அழிந்துவிடும். அழிவு பெருகிவிடும்

தற்காலத்தில் தலைதூக்கி நிற்கும் கொடிய பாவம் காமமாகும். தற்கால ஆண்களையும், பெண்களையும் அரிபிளவையைப்போல் அரித்து நிற்கும் பயங்கர தீமை காம இச்சையே. பார்க்குமிடமெல்லாம் இப்பாவம் நல்ல பாம்புபோல் படமெடுத்து ஆடி நிற்கிறது. அதன் விஷத்துக்குத் தப்பின ஆண்களையோ பெண்களையோ காண்பதரிது. நமது வாலிபப் பெண்களும் ஆண்களும் பெரும்பாலும் இந்த விஷப் பாம்பால் தீண்டப்பட்டவர் களாகவே இருக்கின்றனர். உலகம் முழுவதும் இந்த விஷக் காற்றால் நிறைந்திருக்கிறது. தற்கால உலகம் பத்துக் கற்பனைகளைப் பார்த்துப் பகடிபண்ணுகிறது; கடவுளைப் பார்த்து கைகொட்டிச்சிரிக்கிறது; தூய்மையைப் பார்த்து வேடிக்கை செய்கிறது: கற்பைப் பார்த்துக் காரி உமிழ்கிறது; பேரின்பத்தைப் பார்த்து நகைக்கிறது; புனித ஒழுக்கத்தை அலட்சியம் செய்கிறது: அசுத்தத்தையோ அதிகம்



கவுரவப்படுத்துகிறது; காமத்தையோ கனப்படுத்துகிறது; மாம்ச இச்சையையோ மதித்து மாலையிடுகிறது; சிற்றின் பத்தையோ சிறப்புப்படுத்துகிறது; வேசித்தனத்தையோ வரவேற்கிறது; விபச்சாரத்தையோ மகிமைப்படுத்துகிறது; காம இச்சையையோ இயற்கையென்கிறது; இதெல்லாம் கடைசி அழிவு காலத்தின் அறிகுறிகள். மனிதன் ஒரு மிருகமே எனத் தற்காலத்தவர் கருதுகின்றனர். தாங்கள் மிருக இச்சைகளுக்கு இடம் கொடுப்பதில் தவறொன்று மில்லையென்று தவறாய்ப் போதிக்கப்படுகின்றனர். கற்புடன் தூய வாழ்க்கையாற்ற விரும்புகிறவர்கள் எள்ளி நகையாடப்படுகின்றனர். பரிசுத்தம் பரியாசம் பண்ணப்படுகிறது. கற்புக்கு இக்காசினியில் இடமில்லை போலும்! அந்தோ! பரிதாபம்! இப்பாழ் உலகம் அசுத்த மிருக வாழ்வில் உழன்று சிக்கித் திக்குமுக்காடிச் செத்துக் கிடக்கிறதன்றோ!

காம இச்சையான அசுத்தத்தைப்பற்றி மூன்று காரியங்களைக் கவனிப்போம். முதலாவது, அசுத்தம் எந்த இடத்தில் இருக்கிறதோ, அந்த இடத்தில் அது இருப்பதைப் பற்றிய அடையாளமும் வெளியரங்கமாய்த் தென்படுகிறது. அடிமை வியாபாரம் இருந்த காலத்தில், ஒவ்வொரு எஜமானும் தன்னுடைய அடிமைகளுக்கு ஒவ்வொரு வகை அடையாளக் குறியிட்டுக் கொள்வது வழக்கம். அந்த வெளிப்படை அடையாளக் குறியைக் கண்டவுடனே இந்த அடிமை இந்த எஜமானுக்குரியவன் என்பதை எளிதில் கண்டுபிடித்துவிடலாம். அதுபோலவே பாவத்துக்கு அடிமைப்பட்டிருக்கிறவர்களையும் நாம் வெகு எளிதில் கண்டுபிடித்துவிடலாம். புகை பிடிப்போரை அவர்களுடைய உதடும் பல்லும் காட்டிவிடும். குடிகாரரை அவர்களுடைய கண்ணும், சொல்லும் காட்டிவிடும். பெருமைக்காரரை அவர்களுடைய அகந்தையான விழியும், ஆணவமான

தோற்றமும் காட்டிவிடும் காம சிந்தை கொண்டோரை அவர்களுடைய அகத்தப் பார்வையே காட்டிவிடும். அவர்களுடைய முகத்தில் ஒரு ஜோதியும் மிளிராது; ஓர் அருளும் நிலவாது: ஒரு புனித ஒளியும் வீசாது. அகத்தின் அழகு முகத்தில் தெரியும். அகத்தில் தூய்மையிருந்தால் அது தானாய் முகத்தில் பொங்கி வழியுமன்றோ!

காமம் அது குடியிருக்கும் இதயத்தை கறைப்படுத்தி விடும், சிந்தையை மாசுப்படுத்திவிடும். சொல்லை அசுத்தப் படுத்திவிடும், செயலை மிருகத்தனமாக்கிவிடும், ஆளைக் கெடுத்துவிடும். ஆத்துமாவை அழித்துவிடும். சரீரத்தையும் சிதைத்துவிடும். அசுத்தமானதெதுவும் தேவனுடைய இராஜ்யத்தைச் சுதந்தரித்துக் கொள்ளவே முடியாது என்பதைப் பரிசுத்த வேதாகமம் அழுத்தம் திருத்தமாக அறைகூவியுள்ளது."வஞ்சிக்கப்படாதிருங்கள்; வேசிமார்க்கத்தாரும், விக்கிரகாராதனைக்காரரும், விபசாரக்காரரும், சுயபுணர்ச்சிக்காரரும், ஆண் புணர்ச்சிக்காரரும்_ தேவனுடைய ராஜ்யத்தைச் சுதந்தரிப்பதில்லை" (1கொரி.6:9,10). "விபசாரம் செய்யாதிருப்பாயாக, என்ற ஏழாம் கற்பனைக்கு ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து கொடுத்துள்ள சரியான விளக்கத்தைக் கேளுங்கள்: "ஒரு ஸ்திரீயை இச்சையோடு பார்க்கிற எவனும் தன் இருதயத்தில் அவளோடே விபசாரஞ் செய்தாயிற்று" (மத். 5: 28). செய்கையில் மட்டுமல்ல, சொல்லிலும், சிந்தையிலுங்கூட ஒரு மனிதன் விபசாரம் செய்யக்கூடும் என்பதை ஆண்டவர் அறிவுறுத்துகிறார். தற்காலத்தில் எண்ணிறந்த பேர் தங்கள் மனோவாக்குச் செயலில் அசுத்தராகி காம இச்சைக்குட்பட்டு, ஆண்டவரை விட்டு வழி விலகி போயுள்ளார்கள். காமம் மனிதனைக் கடவுளிடமிருந்துக் கத்தரித்துவிடுகிறது

இரண்டாவது, காமம் மனிதனை வஞ்சித்துப் பாழாக்கிவிடுகிறது எல்லாவற்றைப்பார்க்கிலும் மாம்ச



இச்சையே மனிதனை அதிகமாய் வஞ்சித்துக் கொல்லும் தன்மையுடையதாயிருக்கிறது "முற்காலத்திலே நாமும் புத்தியீனரும், கீழ்ப்படியாதவர்களும், வழிதப்பி நடக்கிறவர்களும், பலவித இச்சைகளுக்கும் இன்பங்களுக்கும் அடிமைப்பட்டவர்களும்... இருந்தோம். நம்முடைய இரட்சகராகிய தேவனுடைய தயையும் மனுஷர்மேலுள்ள அன்பும் பிரசன்னமானபோது, நாம் தெய்வ நீதியின் கிரியைகளினிமித்தம் அவர் நம்மை இரட்சியாமல், தமது இரக்கத்தின்படியே,... நம்மை இரட்சித்தார். தமது கிருபையினாலே நாம் நீதிமான்களாக்கப்பட்டு, நித்திய ஜீவனுண்டாகும் என்கிற நம்பிக்கையின்படி சுதந்தரராகத் தக்கதாக, அவர் நமது இரட்சகராகிய இயேசு கிறிஸ்து மூலமாய் அந்தப் பரிசுத்த ஆவியை நம்மேல் சம்பூரணமாய்ப் பொழிந்தருளினார். இந்த வார்த்தை உண்மையுள்ளது; தேவனிடத்தில் விசுவாசமானவர்கள் நற்கிரியைகளைச் செய்ய ஜாக்கிரதையாயிருக்கும்படி நீ இவைகளைக் குறித்துத் திட்டமாய் போதிக்க வேண்டுமென்று விரும்புகிறேன்; இவைகளே நன்மையும் மனுஷருக்குப் பிரயோஜனமுமானவைகள்" (தீத்து 3:3-8)

சிற்றின்பப் பாவத்தோடு விளையாடாதே. நீ துணிந்து விளையாடினால் உன் மானம் போய்விடும்: "பாவம் செய்கிற ஆத்துமாவே சாகும்" (எசே.18:20). சிம்சோன் விபசாரத்தோடு விளையாடினான். அந்த விபசார பாவத்தோடு விளையாடினான், அது அவனை அவமானப்படுத்தி, அழிவுபடுத்தி, அழுகையும் கண்ணீருமாக்கிவிட்டது. அவன் பின்னர் அதற்காக மனம் வருந்தி, குழந்தையைப் போல், விம்மி விம்மி அழுதான். அவன் உள்ளம் உடைந்தது; மனம் நொறுங்கியது நொறுங்குண்ட இருதயத்தோடும், பாவ மனஸ்தாபக் கண்ணீரோடு பாவ மன்னிப்புக்காக கடவுளிடம் கதறிக் கதறி அழுதான்

"தேவனே, உமது கிருபையின்படி எனக்கு இரங்கும், உமது மிகுந்த இரக்கங்களின்படி என் மீறுதல்கள் நீங்க என்னைச்சுத்திகரியும். என் அக்கிரமம் நீங்க என்னை முற்றிலும் கழுவி, என் பாவமற என்னைச் சுத்திகரியும். என் மீறுதல்களை நான் அறிந்திருக்கிறேன்: என் பாவம் எப்பொழுதும் எனக்கு முன்பாக நிற்கிறது. தேவரீர் ஒருவருக்கே விரோதமாக நான் பாவஞ்செய்து, உமது கண்களுக்கு முன்பாக பொல்லாங்கானதை நடப்பித்தேன்; நீர் பேசும்போது உம்முடைய பரிசுத்தம் விளங்கவும் இதை அறிக்கையிடுகிறேன்" *(சங்.51:1-4)* என்று தாவீது மனங்கசந்து அழுது தன் பாவத்தை ஆண்டவரிடம் அறிக்கையிட்டு, "தேவனே என் பாவங்களைப் பாராதபடிக்கு நீர் உமது முகத்தை மறைத்து, என் அக்கிரமங்களையெல்லாம் நீக்கியருளும். நீர் என்னை ஈசோப்பினால் சுத்திகரியும்; அப்பொழுது நான் சுத்தமாவேன்; என்னைக் கழுவியருளும், அப்பொழுது நான் உறைந்த மழையிலும் வெண்மையாவேன். உமது சமூகத்தை விட்டு என்னைத் தள்ளாமலும், உமது பரிசுத்த ஆவியை என்னிடத்திலிருந்து எடுத்து கொள்ளாமலு மிரும். உமது இரட்சண்யத்தின் சந்தோஷத்தைத் திரும்பவும் எனக்குத் தந்து, உற்சாகமான ஆவி என்னைத் தாங்கும்படி செய்யும். தேவனே சுத்த இருதயத்தை என்னிலே சிருஷ்டியும், நிலைவரமான ஆவியை என்னுள்ளத்திலே புதுப்பியும்" என்று தாவீது மன்றாடினான்.

ஆண்டவர் அவனுக்கு இரங்கி, அவன் பாவத்தை யெல்லாம் கிருபையாய் மன்னித்தார். தாவீது பாவ மன்னிப்பின் நிச்சயம் அடைந்தவனாய் நன்றி பொங்கக் கர்த்தரைப் போற்றி துதிக்கிறான்: "என் ஆத்துமாவே கர்த்தரை ஸ்தோத்திரி என் முழு உள்ளமே அவருடைய பரிசுத்த நாமத்தை ஸ்தோத்திரி. அவர் உன் அக்கிரமங்களையெல்லாம் மன்னித்து, உன் நோய்களையெல்லாம் குணமாக்கி, உன்



பிராணனை அழிவுக்கு விலக்கி மீட்டு, உன்னை கிருபை யினாலும் இரக்கங்களினாலும் முடிசூட்டுகிறார். பூமிக்கு வானம் எவ்வளவு உயரமாயிருக்கிறதோ அவருக்குப் பயப்படுகிறவர்மேல் அவருடைய கிருபையும் அவ்வளவு பெரிதாயிருக்கிறது. மேற்குக்கும் கிழக்குக்கும் எவ்வளவு தூரமோ அவ்வளவு தூரமாய் அவர் நம்முடைய பாவங்களை நம்மை விட்டு விலக்கினார். தகப்பன் தன் பிள்ளைகளுக்கு இரங்குகிறதுபோல கர்த்தர் தமக்குப் பயந்தவர்களுக்கு இரங்குகிறார்

மூன்றாவது அசுத்தம் அசுத்தர்களை அடிமைப்படுத்தி விடுகிறது. "மரணத்துக்கேதுவான பாவத்துக்கானாலும், நீதிக்கேதுவான கீழ்ப்படிதலுக்கானாலும், எதற்குக் கீழ்படியும்படி உங்களை அடிமைகளாக ஒப்புக் கொடுக்கிறீர்களோ, அதற்கே கீழ்ப்படிகிற அடிமைகளாயிருக்கிறீர்களென்று அறியீர்களா?" *(ரோமர் 6:16).*

இலண்டன் மாநகரில் பண்டிதர் பில்லி கிரகாம் அவர்களால் நடத்தப்பட்ட எழுப்புதல் கூட்டத்தில் இலண்டனிலுள்ள ஒரு மருத்துவர் மனந்திரும்பி, தன்னை முழுவதுமாகக் கிறிஸ்துவிடம் ஒப்புவித்தார்; அவருடைய மனந்திரும்புதலுக்கு முன்னர் அவர் காம இச்சைகளுக்கு அடிமைப்பட்டவராய்ச் சிற்றின்ப சேற்றில் ஆழ்ந்து கிடந்தவர். அவருடைய அறை முழுவதும் ஆபாசப் படங்கள் நிறைந்திருந்தன. அவருடைய படிப்பகம் முழுவதும் காமத்தைத்தூண்டும் அசுத்த நூல்கள் குவிந்திருந்தன. சிற்றின்பக் காட்சிகள் நிறைந்த சினிமாப் படங்களைப் பார்ப்பதில் அவர் பேரின்பம் கொள்வார். அவருடைய நெஞ்சமெல்லாம் காமத்தால் கறைபட்டு இருளடைந்து கிடந்தது. அவருடைய அகமுழுவதும் காம அசுத்த உணர்ச்சிகளால் கொழுந்துவிட்டு எரிந்துகொண்டு

இருந்தது. அவருடைய நினைவெல்லாம் அசுத்தம். களவெல்லாம் அசுத்தம், செயலெல்லாம் அசுத்தம், வாழ்வெல்லாம் அசுத்தம். அத்தகைய அழுகிப் புழு புழுத்து நாறிபோன வாழ்வு நடத்திய வைத்தியர் மனந்திரும்பினார். மனங்கசிந்து அழுதார். தன் பாவத்தை அறிக்கையிட்டார். கிறிஸ்துவிடம் பாவ மன்னிப்புக்காகக் கெஞ்சி மன்றாடினார் தன்னிடத்தில் வருகிற ஒருவனையும் புறம்பே தள்ளாத இயேசு கிறிஸ்து இந்த மருத்துவரையும் புறம்பே தள்ளவில்லை: அந்த வைத்தியர் இயேசு கிறிஸ்துவின் இரத்தத்தால் கழுவப்பட்டார். பரிசுத்தாவியானவர் அவரை ஆள் கொண்டார். அவர் கிறிஸ்துவுக்குள் புது சிருஷ்டி யானார் பழையவைகள் ஒழிந்துபோயின; எல்லாம் புதிதாயின.

அவர் ஒரு புது மனிதரானார். தன்னுடைய வீட்டி லுள்ள எல்லா அசுத்த புத்தகங்களையும், பத்திரிக் கைகளையும், ஆபாசப்படங்களையும், ஒன்றாகத் திரட்டி எடுத்து கொண்டு தேம்ஸ் ஆற்றில் வீசி எறிந்தார். அந்த அசுத்த நூல்களும் படங்களும் வெள்ளத்தில் அடிப்பட்டுப் போனபோது அவர் அவற்றைப் பார்த்து: "அதோ என்னுடைய பழைய அசுத்த ஜீவியமெல்லாம் கொல்கொதா இரத்தவெள்ளத்தில் அடிபட்டுப்போகிறது. இயேசு கிறிஸ்துவின் சிலுவை இரத்த புண்ணியத்தால் இப்போது நான் கிறிஸ்துவுக்குள் புது சிருஷ்டியாகிவிட்டேன். கிறிஸ்துவுக்குத் தோத்திரம்! எனக்காக அடிக்கப்பட்ட ஆட்டுக்குட்டியானவருக்கே எல்லா மகிமையும் கனமும் உண்டாவதாக: ஆமென்" என்கிறார். இப்பொழுது அந்த வைத்தியரின் இதயத்தில் இயேசு கிறிஸ்து தங்கி அவருடைய வாழ்வில் பரிசுத்தமாகப் பொங்கி வழிகிறார். அவர் கிறிஸ்துவுக்குள் பரிசுத்த வெற்றி வாழ்க்கை நடத்துகிறார்.



ஆயிரக்கணக்கான மக்கள் பாவ அசுத்தத்திற்கு அடிமைகளாய் இருக்கிறார்கள். பாவம் அவர்களை ஆள் கொண்டு, மேற்கொண்டு அவர்களை ஆட்டி அசைத்து ஆட்சி புரிகிறது. காம இச்சைகளுக்கும் சிற்றின்ப ஆசைகளுக்கும் கீழ்ப்படிந்து அசுத்த ஆவி சொல்லுகிறபடியெல்லாம் நடந்து மாம்ச இச்சைகளுக்குத் தங்களை விற்றுப்போட்டவர்கள், பாவத்திற்கு அடிமைகளாகி விடுகிறார்கள். "பாவஞ் செய்கிறவன் எவனும் பாவத்துக்கு அடிமையாயிருக்கிறான்" (யோவான் 8:34). சிற்றின்ப ஆபாசத்தில் ஈடுபட்டவர்கள், தாங்கள் செய்வது தவறு என்று தெளிவாய்த் தெரிந்தும், அப்பாவ வாழ்க்கையை விட்டுவிடச் சக்தியற்றவர்களாய் இருக்கிறார்கள். பாவம் அவர்களுக்கு எஜமானாகி விடுகிறது. அசுத்த ஆவி அவர்களைக் கைப்பொம்மைகளாக ஆட்டிப் படைக்கிறது. "நிர்ப்பந்தமான மனிதன் நான்" என்று அலறி ஓலமிடுகிறார்கள்.

இவ்வாறு காம இச்சைகளுக்கும், விபசார வேசித் தன்மைகளுக்கும், அசுத்த சிற்றின்பங்களுக்கும் ஆளாகி இருக்கிறவர்களுக்கு விமோசனமே இல்லையா? அவர்களுக்கு விடுதலையே இல்லையா? விடுதலை உண்டு, அதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. அந்த ஒரே வழி இறைவனாகிய இயேசு இரட்சகர்தான். இயேசு கிறிஸ்து நம்மை விடுதலை யாக்கினால் நாம் மெய்யாகவே விடுதலையாவோம். "குமாரன் உங்களை விடுதலையாக்கினால் மெய்யாகவே விடுதலையாவீர்கள்" (யோவான் 8:36). எண்ணிறந்தபேர் இயேசு கிறிஸ்துவால் பாவத்தினின்று விடுதலை பெற்றுள் ளார்கள். அசுத்த வாழ்வில் ஆழ்ந்திருந்த மகதலேனா மரியாளைக் கேட்டுப்பாருங்கள். யாக்கோபின் கிணற்றருகே வந்த சமாரிய விபசார ஸ்திரீயை விசாரித்துப் பாருங்கள். விபசாரத்தில் கையும் மெய்யுமாகக் கண்டு பிடிக்கப்பட்ட, பட்டணம் அறிந்த படுபாவியான ஸ்திரீயைக் கேட்டுப்

பாருங்கள். அவர்களைப்போல் கோடான கோடி மக்கள் இயேசு கிறிஸ்துவின் இரத்தத்தால் சகல பாவங்களுமறக் கழுவிச் சுத்திகரிக்கப்பட்டு, கிறிஸ்துவுக்குள் புது சிருஷ்டிகளாக மாறி, பேரின்பத்தால், பரிசுத்தத்தால் நன்றியால் பொங்கிவிடும் பாட்டைச் செவிமடுத்து கேளுங்கள்:

"இம்மானுவேலின் இரத்தத்தால்
நிறைந்த ஊற்றுண்டே
எப்பாவத் தீங்கும் அதனால்
நிவர்த்தி யாகுமே"

விபசாரத்திலே கண்டுபிடிக்கப்பட்ட பெண்ணின் வரலாற்றை விவரமாய்க் கவனியுங்கள்: "விபசாரத்திலே கண்டு பிடிக்கப்பட்ட ஒரு ஸ்திரீயை வேதபாரகரும் பரிசேயரும் அவரிடத்தில் கொண்டு வந்து, அவளை நடுவே நிறுத்தி: போதகரே, இந்த ஸ்திரீ விபசாரத்தில் கையும் மெய்யுமாய்ப் பிடிக்கப்பட்டாள். இப்படிப்பட்டவர்களைக் கல்லெறிந்து கொல்லவேண்டுமென்று மோசே நியாயப் பிரமாணத்தில் நமக்குக் கட்டளையிட்டிருக்கிறாரே, நீர் என்ன சொல்கிறீர் என்றார்கள். அவர்மேல் குற்றம் சுமத்துவதற்கான காரணம் உண்டாகும்பொருட்டு அவரைச் சோதிக்கும்படி இப்படிச் சொன்னார்கள். இயேசுவோ குனிந்து, விரலினால் தரையிலே எழுதினார். அவர்கள் ஓயாமல் அவரைக் கேட்டுக்கொண்டிருக்கையில், அவர் நிமிர்ந்து பார்த்து: உங்களில் பாவமில்லாதவன் இவள் மேல் முதலாவது கல்லெறியக்கடவன் என்று சொல்லி, அவர் மறுபடியும் குனிந்து, தரையிலே எழுதினார். அவர்கள் அதைக்கேட்டு, தங்கள் மனச்சாட்சியினால் கடிந்து கொள்ளப்பட்டு, பெரியோர் முதல் சிறியோர் வரைக்கும் ஒவ்வொருவராய்ப் போய்விட்டார்கள். இயேசு தனித்திருந் தார் அந்த ஸ்திரீ நடுவே நின்றாள். இயேசு நிமிர்ந்து அந்த



ஸ்திரீயைத் தவிர வேறொருவரையுங் காணாமல் : ஸ்திரீயே, உன்மேல் குற்றஞ்சாட்டினவர்கள் எங்கே? ஒருவனாகிலும் உன்னை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கவில்லையா என்றார் அதற்கு அவள்: இல்லை, ஆண்டவரே, என்றாள். இயேசு அவளை நோக்கி: நானும் உன்னை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கிறதில்லை; நீ போ, இனிப் பாவஞ் செய்யாதே என்றார்" (யோவான். 8:3-11).

இந்த விபசார ஸ்திரீயைப்போல் எல்லா மனிதர்களும் பாவிகளே. எல்லாரும் பாவஞ்செய்து தேவ மகிமை யற்றவர்களாகி விட்டோம்" (ரோமர் 3:23). இயேசு கிறிஸ்து ஒருவரே நம்மைப் பாவத்திலிருந்து இரட்சிக்க வல்லவர் "நாம் பாவங்களுக்குச் செத்து, நீதிக்குப் பிழைத்திருக்கும் படிக்கும், அவர் தாமே தமது சரீரத்திலே நம்முடைய பாவங்களைச் சிலுவையின்மேல் சுமந்தார்." இயேசு கிறிஸ்து ஒருவரே உலகத்தின் பாவத்தைச் சுமந்து தீர்த்த தேவ ஆட்டுக்குட்டி அவர் நம் பாவத்தைச் சுமந்து தீர்த்து விட்டார். நமது சாபத்தைச் சுமந்து தீர்த்துவிட்டார். நமது மரணத்தைச் சுமந்து தீர்த்துவிட்டார். நமது நரக ஆக்கினையைச் சுமந்து விட்டார். "உலகத்தை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கும்படி தேவன் தம்முடைய குமாரனை உலகத்தில் அனுப்பாமல், அவராலே உலகம் இரட்சிக்கப்படுவதற்காகவே அவரை அனுப்பினார்." "அவரை விசுவாசிக்கிறவன் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படான்; விசுவாசியாதவனோ, தேவனுடைய ஒரே பேறான குமாரனுடைய நாமத்தில் விசுவாசமுள்ளவனாயி ராதபடியினால் அவன் ஆக்கினைத் தீர்ப்புக்குட் பட்டாயிற்று" (யோவான் 3 : 17,18)

முதலாவது, நீ ஓர் அசுத்த பாவி என்பதை ஒத்துக் கொள். இரண்டாவது, உன் பாவத்தை இயேசு கிறிஸ்துவிடம்

மனத்தாழ்மையோடும் உண்மையான உத்தம மனஸ்தாபத்தோடும் அறிக்கையிடு. மூன்றாவது, இயேசு கிறிஸ்துவை உன் சொந்த இரட்சகராக உன் இதயத்தில் ஏற்றுக்கொள் அப்பொழுது இயேசு கிறிஸ்து நமது பரிசுத்த இரத்தத்தால் உன் சகல பாவங்களுமற உன்னைக் கழுவிச் சுத்திகரித்து, பரிசுத்த ஆவியானவர் மூலமாய் உன்னை ஆள்கொள்ளுவார். அப்பொழுது நீ கிறிஸ்துவுக்குள் புது சிருஷ்டியாவாய் பழைய அசுத்த ஜீவியம் ஒழிந்து போகும். எல்லாம் புதிதாகும். கிறிஸ்துவே உன் பரிசுத்தம் ஆவார். அவரே உனக்குப் பரிசுத்தமாக உன் இதயத்திலிருந்து பொங்கி வழிவார். கிறிஸ்துவையல்லாமல் உன்னால் ஒன்றும் செய்யமுடியாது. கிறிஸ்து உன்னிலும், நீ கிறிஸ்துவிலும் நிலைத்திருந்தால், நீ பரிசுத்தாவியானவர் மூலமாய்ப் பரிசுத்த கனிகளைக் கொடுப்பாய்: பரிசுத்த வெற்றி வாழ்க்கை ஆற்றுவாய்; கிறிஸ்துவையல்லாமல் நீ ஒன்றும் செய்யவே முடியாது. கிறிஸ்துவே பரிசுத்தம்

# 5

# பெருந்தீனி

300 கிலோ நிறையுள்ள ஒரு மனிதனை நான் அறிவேன் அவர் உண்ணும் உணவின் அளவைப் பார்த்தால் நீங்கள் அசந்து போவீர்கள். அவர் உயிர் வாழ்வதற்காக உண்கிறவர்போல் தெரியவில்லை; உண்பதற்காகவே உயிர்வாழ்கிறவர்போல் தெரிகிறது. அந்தோ! பரிதாபம்! அவருடைய பெருந்தீனியே அவருடைய உயிருக்கு உலைவைத்துவிடும் என்பதை அவர் அறியார் போலும்! தன்னுடைய பிரேதக் குழியைத் தன்னுடைய சொந்தக் கையால் தோண்டிக்கொண்டிருக்கிறார் என்பதை அவர் அறியாது போய்விட்டார். பட்டினிச் சாவுகளைவிட இக்காலத்தில் பெருந்தீனிச் சாவுகளே அதிகம்! தற்கால உலகில் தலைவிரித்தாடும் பெரும்பாலான பயங்கர நோய்களுக்குக் காரணம் பெருந்தீனியே. பெருந்தீனி மனிதனைக் கொல்லும் ஒரு கொடிய பாவம் என்று பரிசுத்த வேதாகமம் பறைசாற்றியுள்ளது. "பெருந்தீனிக்காரருடைய முடிவு அழிவு, அவர்களுடைய தேவன் வயிறு, அவர்களுடைய மகிமை அவர்களுடைய இலச்சையே அவர்கள் பூமிக்கடுத்தவைகளைச் சிந்திக்கிறார்கள்" (பிலி. 3:19)

ஏழு கொடிய பாவங்களுள் பெருந்தீனியும் ஒன்று ஆணவம், கோபம், பொறாமை, காமம் போன்ற பாவங்களைப் போல் பெருந்தீனியும் மனிதனைக் கொல்லக்கூடிய ஒரு

கொடிய பாவமே என்று திருச்சபை முற்பிதாக்கள் எச்சரித்துள்ளார்கள் நம்மில் அநேகர் பெருந்தீனியை ஒரு பாவமாக கருதுகிறதில்லை. அநேகர் பெருந்தீனிக்காரராயிருக்கின்றனர் கிறிஸ்தவர்களிடையே உலாவும் மோசமான பாவங்களுள் பெருந்தீனியைத் தடுப்பதற்குத் தேசத்தில் சட்டமில்லையானாலும் பெருந்தீனியை எதிர்த்து எச்சரிப்பதற்குச் சத்திய வேதாகமத்திலே தேவ வசனங்கள் உண்டு

பெருந்தீனிக்காரர் தங்கள் கண்ணிலிருக்கிற உத்திரத்தை உணராமல், தங்கள் சகோதரர் கண்ணிலிருக்கிற துரும்பைப் பார்க்கிறதென்ன? இதோ உன் கண்ணில் பெரும்தீனியாகிய உத்திரம் இருக்கையில் உன் சகோதரனை நோக்கி; "நான் உன் கண்ணிலிருக்கும் துரும்பை எடுத்துப் போடட்டும்" என்று நீ சொல்வதெப்படி? பெருந்தீனிக்காரனே முன்பு உன் கண்ணிலிருக்கிற பெருந்தீனியாகிய உத்திரத்தை எடுத்துப்போடு: பின்பு உன் சகோதரன் கண்ணிலிருக்கிற துரும்பை எடுத்துப்போட வகை பார்ப்பாய் குடிக்கிறவனைக் கண்டு நகைக்கிறோம்; அவனை அருவருக்கிறோம். ஆனால் மித மிஞ்சி உண்கிறவனைக்கண்டு நாம் நகைக்கிறதில்லை. அவனை அருவருக்கிறதுமில்லை பெருந்தீனியை ஒரு பாவம் என்று நாம் சாதாரணமாகக் கருதாததே இதற்குக் காரணமாகும். பெருந்தீனிக்காரன் பிறரைப் பார்த்து இகழ்கிறான் "தேவனே! நான் பறிகாரர், அநியாயக்காரர், விபசாரக்காரர் ஆகிய மற்ற மனுஷரைப் போலவும், இந்த ஆயக்காரனைப்போலவும் இராததினால் உம்மை ஸ்தோத்திரிக்கிறேன்" (லூக்கா 18 : 11) என்பதுபோல பெருந்தீனிக்காரன் மற்றவர்களை மிகமிகப் பெரிய பாதகர்களாகவும், தன்னையோ மிகமிக நல்லவனாகவும் எண்ணிக் கொள்கிறான். தான் வயிற்றுச் சாமியைக் கும்பிடுகிறவன் என்பதை மறந்து போகிறான். தான் பெருந்தீனி என்னும் பாவத்தில் கண் மூக்குத் தெரியாமல்



மூழ்கிக் கிடப்பதை அறியாதிருக்கிறான். தன் பாவம் தனக்குத் தெரிவதில்லை தங்கள் பாவத்தை மனிதர் உணருகிறதுமில்லை; தங்கள் பாவத்தைப் பெரிதாக நினைக்கிறதுமில்லை மற்றவர்களுடைய பாவமே அவர்கள் கண்ணுக்குப் பெரிதாகத் தோன்றுகிறது. தாங்கள் அளவுக்கு மிஞ்சி உண்பது பாவம் என்பதைச் சிந்தியாதிருக்கிறார்கள் அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சாகுமன்றோ!

பெருந்தீனிக்காரருக்கு அவர்களுடைய சுகபோக வாழ்வே தெய்வமாகி விடுகிறது. இவ்வுலகில் ஒரே ஒரு தடவைதான் வாழமுடியும். ஆகவே அந்த ஒரு வாழ்நாளில் எவ்வளவு உண்ண முடியுமோ அவ்வளவு உண்டு, எவ்வளவு குடிக்க முடியுமோ அவ்வளவு குடித்து எவ்வளவு இன்புறமுடியுமோ அவ்வளவு இன்புற்று, எவ்வளவு களித்து ஆடமுடியுமோ அவ்வளவு களித்து ஆடி, 'கண்டதே காட்சி, கொண்டதே கோலம்' என்பதுபோல் கம்பீரமாய் இம்மண்ணுலகில் வாழ விரும்புகிறார்கள் மனிதர்கள் செல்வமாய் வாழ்ந்து, பெருந்தீனி தின்று தங்களைக் கொழுக்க வைக்க விரும்புகிறார்கள் மனிதர்கள். நாளைக்குச் சாகுமுன் இன்று உல்லாசமாய் உண்டு, உடுத்தி மகிழ்கொண்டாடுவோம் என்று கொக்கரிக்கிறார்கள் மனிதர்கள். அதற்கென்று பணத்தைக் கொள்ளையடிக்கிறார்கள்; செல்வத்தைத் திரட்டுகிறார்கள். பொருள்களைச் சேர்க்கிறார்கள்; உணவுதானியங்களை மலைபோல் குவித்து வைத்துக்கொள்கிறார்கள். இவ்வுலக சுகபோக ஆடம்பர வாழ்க்கையே அவர்களுக்குப் பிரதானம். அவர்கள் மறுவுலக வாழ்க்கைப்பற்றி சிறிதும் சிந்திக்கிறதில்லை. ஆண்டவர் இத்தகைய மனிதருடைய வாழ்வைப் படம் பிடித்துக் காட்டியுள்ளார்: ஐசுவரியமுள்ள ஒருவனுடைய நிலம் நன்றாய் விளைந்தது. அப்பொழுது அவன்: "நான் என்ன செய்வேன்? என் தானியங்களைச் சேர்த்து வைக்கிறதற்கு

இடமில்லையே; நான் ஒன்று செய்வேன், என் களஞ்சியங்களை இடித்து, பெரிதாகக் கட்டி, எனக்கு விளைந்த தானியத்தையும் என் பொருள்களையும் அங்கே சேர்த்துவைத்து பின்பு: ஆத்துமாவே, உனக்காக அநேக வருஷங்களுக்கு அநேக பொருள்கள் சேர்த்து வைக்கப் பட்டிருக்கிறது; நீ இளைப்பாறி, புசித்துக் குடித்து பூரிப்பாயிரு என்று என் ஆத்துமாவோடே சொல்லுவேன் என்று தனக்குள்ளே சிந்தித்துச் சொல்லிக்கொண்டான். தேவனோ அவனை நோக்கி: மதிகேடனே, உன் ஆத்துமா உன்னிடத்திலிருந்து இந்த இராத்திரியிலே எடுத்துக் கொள்ளப்படும். அப்பொழுது நீ சேகரித்தவைகள் யாருடைய தாகும் என்றார். தேவனிடத்தில் ஐசுவரியவானாயிராமல் தனக்காகவே பொக்கிஷங்களைச் சேர்த்து வைக்கிறவன் இப்படியே இருக்கிறான் என்றார்" (லூக்கா 12 : 16-21) ஆகாரத்தைப் பார்க்கிலும் ஜீவனும், உடையைப் பார்க்கிலும் சரீரமும் விசேஷித்தவைகளாய் இருக்கிறது. மனிதன் அப்பத்தினால் மாத்திரம் அல்ல, தேவனுடைய வாயிலிருந்து புறப்படும் ஒவ்வொரு வார்த்தையினாலும் பிழைப்பான் மனிதருடைய ஜீவ அப்பம் இயேசு கிறிஸ்துவே எனவே மனிதனுடைய கண்ணும் கருத்துமெல்லாம் கிறிஸ்துவைச் சொந்தமாக்கிக் கொள்வதிலும், அவரையே விசுவாசித்து நேசித்து சேவிப்பதிலேயுமே இருக்கவேண்டும். இயேசு கிறிஸ்துவின் சித்தத்தை நிறைவேற்றுவதே நம்முடைய மெய்யான உணவு.

தன்னடக்கம், கட்டுப்பாடு, இச்சையடக்கம் போன்ற பண்புகள் தற்காலத்தில் மதிப்பிழந்து வருகின்றனபோலும்! மனம்போனபடி, தன் இஷ்டம்போல் வாழ்வதுதான் தற்கால வாழ்க்கை முறைபோலும்! கட்டுப்பாடு, தனது கண்ணியத்தை இழந்து வருகிறதுபோலும்! இச்சைகளை நிறைவேற்று வதிலேயே தற்கால மனிதன் தன் வாழ்நாள் முழுவதையும்



செலவிடுவதற்குத் தயங்குவதில்லை என்று கூடக் கூறலாம். தன் மனத்தையெல்லாம் ஆபாச எண்ணங்களாலும், தன் கண்களையெல்லாம் அசுத்த பத்திரிகைகளாலும், தன் வயிற்றையெல்லாம் மிதமிஞ்சிய கொழுத்த உணவுகளாலும் நிரப்புவதிலேயே தன் நேரம் முழுவதையும் செலவிடுகிறான் தற்கால மனிதன். அவனுக்குக் கடவுளைப் பற்றி எண்ணு வதற்குக்கூட நேரமில்லாது போய்விடுகிறது. தன் உடலைக் கொழுக்க வைக்கிற மனிதன் தன் ஆத்துமாவைப் பட்டினி போட்டு கொன்று போடுவதற்குத் தயங்காதிருக்கிறான். சரீரம் கொழு கொழுவெனச் செழித்தோங்குகிறது. ஆனால் ஆத்துமாவோ பட்டினிகிடந்து சாகிறது. உபாகமம் 8:3இல் ஆண்டவர் கூறியுள்ளதை மீண்டும் நினைவில் இருத்திக் கொள்வோம். "மனிதன் அப்பத்தினால் மாத்திரம் அல்ல, கர்த்தருடைய வாயிலிருந்து புறப்படுகிற ஒவ்வொரு வார்த்தையினாலும் பிழைப்பான்." ஜீவ அப்பமாகிய இயேசு கிறிஸ்துவை, அன்றாடம் நமது ஆத்துமா உள்கொண்டு, வளர்ந்து வருகிறதா?

"என் மகனே, நீ செவிகொடுத்து ஞானமடைந்து, உன் இருதயத்தை நல் வழியிலே நடத்து. மதுபானப்பிரியரையும் மாம்சப் பெருந்தீனிக்காரரையும் சேராதே. குடியனும் போஜனப்பிரியனும் தரித்திரராவார்கள்; தூக்கம் கந்தைகளை உடுத்துவிக்கும்" (நீதி. 23:19-21).

உண்பதும், உடுப்பதும், குடிப்பதும் நமது வாழ்வில் முதலிடம் பெறவேண்டியதில்லை. இயேசு கிறிஸ்துவுக்குத்தான் நாம் முதலிடம் கொடுக்க வேண்டும். ஆகாரத்தைத் தேடுவதற்கு நாம் நமது வாழ்வில் முதலிடம் அளிக்க வேண்டியதில்லை தேவனுடைய இராஜ்யத்தைத் தேடுவதுகுத்தான் நாம் முதன்மை அளிக்கவேண்டும். இயேசு கிறிஸ்து இயம்பி யுள்ளதைக் கேளுங்கள்: "ஆகையால் என்னத்தை உண்போம்

என்னத்தைக்குடிப்போம், என்னத்தை உடுப்போம் என்று கவலைப்படாதிருங்கள்.... முதலாவது தேவனுடைய இராஜ்யத்தையும் அவருடைய நீதியையும் தேடுங்கள். அப்பொழுது இவைகளெல்லாம் உங்களுக்குக்கூடக் கொடுக்கப்படும்" (மத். 6 : 31 - 33). நமது மாம்ச பசி தாகங்களைத் தீர்ப்பதில் மட்டுமே நமது வாழ்க்கை முழுவதையும் செலவிட்டு விடக்கூடாது. மாம்சமும் அதன் ஆசை இச்சைகளும் அழிந்துபோகக் கூடியவை. ஆனால் அழியா ஆத்துமாவுக்குரிய ஜீவ அப்பமாகிய இயேசு கிறிஸ்துவை அனுதினமும், புசித்து ஜீவத்தண்ணீராகிய இயேசு கிறிஸ்துவை அனுதினமும் அள்ளிப் பருகி அழியாப் பேரின்பப்பாக்கியம் பெறுவதில் கண்ணும் கருத்துமாய் இருக்கவேண்டும். அநேகர் வாழ்க்கை முழுவதையும் மாம்ச காரியங்களிலும், செலவிட்டு விட்டு, வாழ்க்கையின் இறுதிக்கட்டத்தில்: "கடவுளே, என்மீது கிருபையாயிரும், என் ஆத்துமாவுக்கு இரங்கும்" என்று ஓலமிடுகிறார்கள், வாழ்கையில் மிகமிக முக்கியமான ஆத்தும பிரச்சினையைத் தீர்த்துக் கொள்வதற்கு நாம் முதலிடம் கொடுக்காது, வாழ்க்கையின் இறுதி நிமிடத்தில் ஆத்துமாவைப்பற்றிக் கவலைப்படுவது எவ்வளவு மதியீனம்! இவ்வாழ்வில் ஆன்ம வாழ்வைக் கவனிப்பதல்லோ மாபெரும் முக்கியமான காரியம், மரணப்படுக்கை மனந்திரும்புதலில் நம்பிக்கை வைத்துக்கொண்டு, வாழ்நாள் முழுவதும் மனந்திரும்பாது வாழ்வது எவ்வளவு புத்தியீனம்! வாழ்க்கை முழுவதையும் கிறிஸ்துவின் நாம மகிமைக்காகச் செலவிடுவதல்லவோ புத்தியுள்ள செயல்!! இரட்சிப்பைப்பற்றி வாழ்வில் ஒரு தடவைகூடக் கேள்விப்படாதவர்களுக்கும் சுவிசேஷத்தை அறியாதவர்களுக்கும், இதற்கு முன்னர் பாவ வாழ்க்கையைப்பற்றி ஒரு தடவைகூட எச்சரிக்கப்படாதவர் களுக்கும் மரணத் தருவாயில் மனந்திரும்புவதற்கு ஒருவேளை கடவுள் ஒரு தருணம் கொடுக்கலாம். ஆனால் இயேசு கிறிஸ்துவைக் கேள்விப்பட்டும் அவரை வேண்டாம் என்று தள்ளினவர்களும், மீண்டும் மீண்டும் எச்சரிக்கப்பட்டும் மனந்திரும்பாதவர்களும் மரணப்படுக்கையில்கூட மனந்திரும்புவது அரிது. "ஆண்டவரைத் தேடியும் காணமுடியாதுபோகும் காலம் வரும்" என்று ஆண்டவர் இவ்வுலக மாந்தரைப் பலமாய் எச்சரித்துள்ளதை எப்பொழுதும் நினைவில் இருத்திக் கொள்ள வேண்டும்.



பெருந்தீனி நம்மைக் கல்லறைக்கு அழைத்துச் செல்வதோடு நில்லாமல், நரகத்திற்கும் அழைத்துச் சென்றுவிடும். பெருந்தீனி நம்மை மாம்ச அழிவுக்குட்படுத்து வதோடு, நரக ஆக்கினைக்கு உட்படுத்திவிடும். எல்லாவற்றிலும் நிதானமாயும், ஒழுங்காயும், அடக்கமாயும் இருக்கவேண்டுமென்று பரிசுத்த வேதாகமம் நமக்கு அறிவுரை பகர்ந்துள்ளது. எனவே, நாம் எல்லாவற்றிலும் மிதமாயும், இச்சையடக்கமாயும் ஒழுக வேண்டும். கடவுள் நமக்கு அருளிய எல்லா ஆசீர்வாதங்களையும் பயபக்தி யோடும், அளவோடும் அனுபவிக்க வேண்டும்.

உலகில் எண்ணிறந்த மக்கள் பட்டினியால் செத்துக் கொண்டிருக்கும்பொழுது, நாம் மட்டும் உணவை நிதானத் தோடு பயன்படுத்தாது, மிதமிஞ்சித் தின்று நம் உடலையும் பிறரையும் சாகடித்துக் கொண்டிருப்பது பாவமாகும். பெருந்தீனி தன்னயத்தின் உச்ச கட்டமாகும். எனவே பிற கொடிய பாவங்களைப்போல் பெருந்தீனியும் அருவருத்து ஒதுக்கித் தள்ளவேண்டிய கொடிய பாவமே. ஆமோஸ் 6:4-6-ஆம் வசனங்களில் ஆண்டவர் கூறியுள்ளதைக் கேளுங்கள்: "தந்தக் கட்டில்களில் படுத்துக்கொண்டு, தங்கள் மஞ்சங்களின்மேல் சவுக்கியமாய்ச் சயனித்து, மந்தையிலுள்ள ஆட்டுக் குட்டிகளையும், மாட்டுத் தொழுவத்திலுள்ள கன்றுக் குட்டிகளையும் தின்று. ... பெரிய பாத்திரங்களில் மது பானத்தைக் குடித்து சிறந்த பரிமளத்தைலங்களைப் பூசிக் கொள்ளுகிறார்கள்..."

இவ்வையகத்தில் மக்களுள் ஐந்தில் மூன்று பாகத்தினர் உண்ண உணவும் உடுக்க உடையும், தங்க உறைவிடமும் இன்றி வாடிக்கொண்டிருக்கிறார்கள் ஆனால் ஒரு சிலரோ தங்களுக்கும் தங்கள் அவசியத்திற்கும் அதிகமான மிதமிஞ்சின பொருள்களைக் குவித்து, பெருந்தீனி தின்று தங்களைக் கொழுக்க வைத்துக் கொண்டிருக்கிறார்கள். மற்றவர்கள் பசிப்பிணியால் வாடுவதைப்பற்றி அவர்களுக்கு அக்கரையே இல்லை "ஒருவன் இவ்வுலக ஆஸ்தி உடையவனாயிருந்து, தன் சகோதரக்குக் குறைச்சலுண்டென்று கண்டு, தன் இதயத்தை அவனுக்கு அடைத்துக் கொண்டால். அவனுக்குள் தேவ அன்பு நிலை கொள்ளுகிறதெப்படி?" *(1 யோவான் 3:17)*

நாம் நமது உதடுகளால் இனிக்க இனிக்கப் பேசுகிறோம். ஆனால் நமது கைகளையோ இறுக மூடிக்கொள்ளுகிறோம் நமது கைகளால் அன்னத்தையும், ஆடைகளையும் பயன்மிக்க பிறபொருள்களையும், அள்ளி அள்ளி பிறர்க்கு அன்புடன் வழங்குவோம். பசியுற்றோருக்கு ஆகாரம் கொடுப்போம். தாகமுள்ளோருக்குப் பானம் வழங்குவோம் ஆடையற்றோருக்கு ஆடைகள் அளிப்போம் பிணியுற்றோருக்கு மருத்துவம் செய்வோம். மருத்துவ மனையில் இருப்போருக்கு ஆறுதலும், சுகமும் அளிப்போம். தன்னலம் கருதாது, பிறர் நலம் கருதி பிறருக்குப் பணிபுரிவோம் தன் வயிற்றைக் கொழுத்த உணவுகளால் நிரப்பித் திணித்து, வெடிக்கவைப்பதிலேயே ஈடுபட்டு உணவையும், நேரத்தையும் வீணாக்கிக் கொண்டிருக்கிறவர்களுக்கு ஐயோ! அவர்களின் பெருந்தீனியே அவர்களை வதைத்துக் கொன்றுவிடும் என்பதை அவர்கள் அறிந்து கொண்டால் நலமாயிருக்கும் காலதாமதம் ஆபத்தாக முடியும். உடனே விழித்தெழுவோம்! பெருந்தீனியை ஒழித்திடுவோம்!!



நமது சரீரம் பரிசுத்தாவியானவர் தங்குவதற்கென்று கடவுளால் கட்டப்பட்ட ஆலயமாகும் நம்முடைய ஆவி, ஆத்துமா, சரீரம் மூன்றும் தேவனுக்குரியவை கடவுளே நம்மைச் சிருஷ்டித்தார். நாம் பாவத்தில் வீழ்ந்தபோது, ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து சிலுவையிலே தம்மைப்பலி கொடுத்து இரத்தக் கிரயத்தால் நம்மை மீட்டுக் கொண்டார் எனவே, நாம் முழுக்க முழுக்க கிறிஸ்துவுக்குரியவர்கள். கிறிஸ்துவின் ஆவியானவர் தங்கி வாசம் பண்ணவேண்டிய சரீரத்தை நாம் கெடுத்தால், தேவன் நம்மைக் கெடுப்பார். நீங்கள் தேவனுடைய ஆலயமாயிருக்கிறீர்களென்றும், தேவனுடைய ஆவியானவர் உங்களில் வாசமாயிருக்கிறாரென்றும் அறியாதிருக்கிறீர்களா? எனவே சரீரத்திற்கு விரோதமாய்ச் செய்யப்படுகிற எந்தப் பாவமும் கடவுளுக்கு விரோதமாய்ச் செய்யப்படுகிற பாவமாகும். நாம் மனம்போனபடி நமது சுய இஷ்டம் போல் நடந்தால். அழிவது திண்ணம். நாம் கிறிஸ்துவுக்குச் சொந்தமானவர்கள். கிறிஸ்துவின் சித்தப்படி நடக்கவேண்டியவர்கள் "உங்கள் சரீரமானது நீங்கள் தேவனாலே பெற்றும் உங்களில் தங்கியும் இருக்கிற பரிசுத்த ஆவியினுடைய ஆலயமாயிருக்கிறதென்றும்... அறியீர்களா? கிரயத்துக்குக் கொள்ளப்பட்டீர்களே; ஆகையால் தேவனுக்கு உடையவைகளாகிய உங்கள் சரீரத்தினாலும் உங்கள் ஆவியினாலும் தேவனை மகிமைப்படுத்துங்கள்"*(1 கொரி. 6:19, 20).*

பெருந்தீனி, மதுபானவெறி, காமம் ஆகிய மூன்று பாவங்களும் சேர்ந்து ரோம சாம்ராஜ்யத்தையே வீழ்த்தி விட்டன அக்காலத்தில் உலகப் புகழ்பெற்றிருந்த மாபெரும் வல்லரசு மக்களாகிய ரோமர் தங்கள் கல்லறைகளைத் தாங்களாகவே தங்கள் பெருந்தீனிப் பற்களால் தோண்டிக் கொண்டார்கள். பெருந்தீனியால் செத்த தங்கள் பிணங்களுக்குத் தங்கள் வேசித்தனத்தால் தங்களையே குழி

தோண்டிப் புதைத்துக் கொண்டார்கள். அவர்களுடைய ஆடம்பர விருந்துகளில் விதவிதமாகக் கொழுமையான உணவு வகைகள் குவித்து வைக்கப்பட்டிருக்கும். அவர்கள் எவ்வளவு வேண்டுமானாலும் அள்ளி அள்ளித் தின்று, தங்கள் வயிற்றில் திணித்துக் கொள்ளலாம். அவர்கள் உண்ணும் அளவுக்கு வரம்பே கிடையாது. அக்கொழுமை யான ஆகாரத்தில் அவர்கள் அளவற்ற ஆசை கொண்டவர் களாய், மேலும், மேலும் உண்பதற்கு பேராசை கொண்டு, தாங்கள் முன்னால் தின்றதையெல்லாம் ஜன்னலுக்கு வெளியே வாந்தி பண்ணிப் போட்டு, மீண்டும் அமர்ந்து தங்கள் வயிற்றைக் கொழுமையான ஆகாரங்களால் நிரப்பிக் கொண்டேயிருப்பது அக்காலத்து ரோம விருந்துகளில் காணப்படும் சாதாரணக் காட்சியாகும். பெருந்தீனிக்கும் குடிவெறிக்கும் விபசாரத்திற்கும் தங்களை ஒப்புக் கொடுத்த எந்த மனிதனோ அல்லது மனுஷியோ அல்லது தேசமோ கடவுளுடைய ஆசீர்வாதத்தைப் பெறவே முடியாது. சரீரத்தைப் பெருந்தீனியால் கொழுக்க வைத்து ஆத்துமாவைப் பட்டினி போட்ட ரோமசாம்ராஜ்யம் வீழ்ந்ததுபோல், பெருந்தீனி பாவத்துக்குட்படும் எந்த நாட்டினரும், எந்த தனிநபரும் வீழ்ச்சியுறுவது உறுதி. பிழைக்கத்தக்கதாக அல்ல, அநேகர் சாகத்தக்கதாக அளவுக்கு மிஞ்சி சாப்பிடுகிறார்கள். சுகபோகத்தில் மூழ்கிக் கிடக்கி றார்கள். "சுகபோகமாய் வாழ்கிறவள் உயிரோடே செத்தவள்" *(1 தீமோ. 5:6)*. கடவுளை மறந்து, மிதமிஞ்சி, நிதானமிழந்து உண்பதிலும் உடுப்பதிலும், கிடக்கிறவர்கள் தங்கள் ஆத்துமாக்களைத் தற்கொலை செய்து கொள்கிறார்கள்.

மனசாந்தி இழந்து, ஆன்ம சமாதானமற்று, இரட்சிப்பின் பேரின்ப மகிழ்ச்சியில்லாதவர்களால் மக்கள் அவதியுறுவதைக் காணுங்கால், தற்கால மக்கள் எவ்வள வாய்த் தங்கள் வயிற்றையே பூசித்து தங்கள் ஆத்தும வாழ்வை



அறவே மறந்து விட்டார்கள் என்பதைக் காட்டுகிறது. அவர்கள் சரீரமானது பெருந்தீனியால் சுகமாக இருக்கிறதா என்றால் அதுவுமில்லை. எனவே பெருந்தீனியானது சரீரத்தையும், ஆத்துமாவையும் கொல்ல வல்லதொரு கொடிய பாவமாகும். விபசாரத்தை விலக்குவதுபோல பெருந்தீனியையும் விலக்க வேண்டும். பெருந்தீனியை நாம் விலக்காவிட்டால், பெருந்தீனி நம்மைக் கொன்றொழித்துவிடும்.

நமக்கு சரீரமட்டுமல்ல, ஆத்துமாவும் உண்டு என்பதை மறந்துபோகக்கூடாது. சரீரத்திற்கு எவ்வாறு உணவு தண்ணீர், காற்று அத்தியாவசியத் தேவையோ, அவ்வாறே ஆத்துமாவுக்குக் கிறிஸ்து தேவையாகும். ஆத்துமாவைப் போஷிக்கும் ஜீவ ஆகாரம் இயேசு கிறிஸ்துவே ஆத்துமாவின் தாகத்தைத் தீர்க்கும் ஜீவ தண்ணீர் இயேசு கிறிஸ்துவே. ஆத்துமாவுக்கு வேண்டிய ஜீவ காற்று இயேசு கிறிஸ்துவே. எனவே மனிதன் வெறும் சரீர அப்பத்தினால் மாத்திரமல்ல, ஜீவ அப்பமாகிய இயேசு கிறிஸ்துவால் பிழைக்கவேண்டியவன். மனிதனுடைய சரீரத்திற்கும், ஆவிக்கும், ஆத்துமாவிற்கும் உயிரானவர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே. நானே ஜீவன் என்றவர், நமக்கு ஜீவனாகாவிட்டால் நாம் செத்துப்போவோம்.

ஆத்துமாவை அறவே மறந்து, தங்கள் சரீரத்தை மட்டும் பேணிவளர்த்துக் கொழுக்கவைத்து வருகிறவர்கள் பெருந்தீனி என்னும் பாவத்திற்கு உட்பட்டவர்கள். கெட்டகுமாரன் உவமை நமக்கு அறியதொரு பாடத்தைக் கற்றுத் தருகிறது. கெட்டகுமாரனுக்கு மனம்போனபடி உண்டு, உறங்கி, குடித்து, வெறித்து ஆடிப்பாடி உலகத்தில் சுக போகமாய் வாழவேண்டுமென்று ஆசை உண்டானவுடனே, அப்பாவ ஆசை அவனைத் தகப்பன் வீட்டிலின்று பிரித்துவிடுகிறது அவன் கண்டதே காட்சி, கொண்டதே கோலம், தின்றதே

மகிழ்ச்சி, குடித்ததே குதூகலம், ஆடினதே ஆனந்தம், பாடினதே பரமானந்தம், சுகபோகமே சொர்க்கம் என்று சிற்றின்பத்தில் சொக்கித் திளைக்கிறான். ஆனால் அது பேரின்பமல்ல. சிற்றின்பந்தான் என்பதைச் சிறிது காலத்திற்குள் கண்டு கொள்ளுகிறான். அவனுடைய சுகபோக வாழ்க்கை நீடித்து நித்திய பேரின்ப வாழ்க்கையைக் கனிந்து நிற்கமுடியாது. பாவத்திற்கோர் அழிவுண்டு. சிற்றின்பத்திற்கோர் சிதைவுண்டு. பாவ வாழ்க்கை மனிதனுக்கு நிலையான சமாதானத்தையும் நித்திய சாந்தியையும் அளிக்கமுடியாது. "எல்லாவற்றையும் அவன் செலவழித்த பின்பு, அந்தத் தேசத்தில் கொடிய பஞ்சமுண்டாயிற்று. அப்பொழுது அவன் குறைவுபடத் தொடங்கினான்" (லூக்கா 15:14). மனம்போன சுகபோக சிற்றின்ப வாழ்க்கை கெட்ட குமாரனுக்கு அவன் நினைத்தவாறு நிலைவரமான திருப்தியையும், சாந்தியையும் பேரின்பத்தையும் அளிக்கமுடியாது போய்விட்டது. அவன் குறைவுபடத் தொடங்கினான். அத்தேசத்திலே கொடிய பஞ்சமுண்டாயிற்று. சரீர சுகபோகத்திற்காக ஆத்ம வாழ்வை உதறிவிட்டு வந்தவனுக்கு இப்பொழுது சரீர சுகபோக வாழ்விற்கும் பஞ்சம் உண்டாயிற்று. அவ்வாழ்வு அவனுக்குத் திருப்தியளிக்க முடியாது போய்விட்டது. ஆணவம், சினம், பொறாமை., காமம், பெருந்தீனி, சோம்பல், பேராசை போன்ற எப்பாவமும் நமக்குத் திருப்தியளிக்கவே முடியாது. நமக்குத் திருப்தியளிக்கக் கூடியவர் ஒரே ஒருவர்தான். அந்த ஒருவர் இயேசு கிறிஸ்துதான். உலக உல்லாச வாழ்க்கை, சிற்றின்ப வாழ்க்கை., கடவுளைவிட்டு சாத்தான் சொற்கேட்டு நடக்கும் அக்கிரம வாழ்க்கை, நமக்கு ஒருக்காலும் நித்திய சாந்தியையும்., பேரின்பத்தையும் தர இயலா இவ்வுண்மையைக் கெட்ட குமாரன் கண்டுகொண்டவுடனே, தன்னுடைய விருப்பம் போல் வாழ்ந்த பாவ வாழ்க்கையை விட்டுவிட்டு மனந்திரும்பி, தன் தந்தையிடம் சென்று மன்னிப்புக்கேட்டு "தகப்பனே, பரத்துக்கு விரோதமாகவும், உமக்கு முன்பாகவும் பாவம்



செய்தேன். இனிமேல் உம்முடைய குமாரன் என்று சொல்லப்படுவதற்கு நான் பாத்திரனல்ல" என்று சொன்னான். அப்பொழுது தகப்பன் அவனை மன்னித்து, மீண்டும் அவனைத் தன் மகனாக ஏற்றுக்கொண்டு, பூரண பேரின்ப வாழ்வு இரக்கமாய் அளித்ததுபோல், உனக்கும் எனக்கும் பரம தகப்பனாகிய இயேசு கிறிஸ்து கிருபையாய் பாவ மன்னிப்பு தந்து நித்திய பேரின்ப வாழ்வு அளிக்கத் தயாராக நம்முன் நிற்கிறார். உடனே நாம் பாவ மனஸ்தாபக் கண்ணீரோடு அவருடைய பாதத்தில் வீழ்வோமாக. பாவ மன்னிப்புக்காக கிறிஸ்துவை கெஞ்சுவோமாக.

தன் குற்றங்களை நினைத்து மனம் வருந்தி, இரக்கத்திற்காகச் சிலுவையிலறையுண்ட இயேசு இரட்சகரை நோக்கி " ஆண்டவரே, அடியேனை நினைத்தருளும்" என்று கிறிஸ்துவின் கிருபைக்காக கெஞ்சின கள்ளனைப்பார்த்து: "இன்றைக்கு நீ என்னோடேக்கூடப் பரதீசிலிருப்பாய் என்று மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன்" (லூக்கா 23:42,43) என்று கனிவோடு வாக்களித்த கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை நோக்கி, நீ இப்பொழுதே பாவமன்னிப்புக்காக கெஞ்சு.

கடந்த கால பாவங்களையெல்லாம் கண்ணெதிரே கொண்டு வந்து கண்ணீர் சிந்தி நிற்கும் நண்பரே, இவ்வளவு கொடிய பயங்கரப் பாவங்களையும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து பொறுத்து மன்னிப்பாரா என்று தயங்கிக் கொண்டிருக்கிற நண்பரே, 'என்போன்ற மாபாதகர்களையும் நீசர்களையும் அவர் ஏற்றுக்கொள்வாரா என்று சிறிது சந்தேகித்துக்கொண்டிருக்கும் நண்பரே, "என்னிடத்தில் வருகிறவனை நான் புறம்பே தள்ளுவதில்லை" என்றுரைத்துள்ள ஆண்டவர், அன்போடு தமது காயப்பட்ட இரு கரங்களையும் நீட்டி உன்னை மனமுவந்து ஏற்றுக்கொள்வார். "உங்கள்

பாவங்கள் சிவேரென்றிருந்தாலும், உறைந்தமழையைப்போல் வெண்மையாகும்; அவைகள் இரத்தாம்பரச் சிவப்பாயிருந்தாலும் பஞ்சைப்போலாகும்." "இயேசு கிறிஸ்துவின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி நம்மைச் சுத்திகரிக்கும்."

ஓர் எழுப்புதல் கூட்டம் நான் நடத்திக்கொண்டிருந்த காலத்தில் தொலைபேசி வாயிலாக ஒரு பெண் இவ்வாறு கூறினாள்: " இரவும் பகலும் என்னை வாட்டிப்பிழியும் ஒரு பயங்கரப் பாவம் என்னை அடிமைப்படுத்தியிருக்கிறது, அப்பாவத்தினின்று விடுதலை பெற முடியாது நான் தவித்துத் தத்தளிக்கிறேன். எண்ணிறந்த தடவைகளில் நான் வருந்தி முயன்றும் எனக்கு இப்பாவத்தின்மீது வெற்றி கிட்டவில்லை, இவ்வாறு என்னை ஆள்கொண்டு அவதிப்படுத்தும் அகோரப்பாவம் பெருந்தீனியே இப்பாவத்தினின்று நான் விடுதலை அடைய வழி வகையே இல்லையா?"

இதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. அவ்வழி இயேசு கிறிஸ்துவே. "நானே வழி"என்றுரைத்துள்ள இயேசு இரட்சகரே பாவவிடுதலைக்கு ஒரே ஒப்பற்ற வழியாகத் திகழ்கிறார். பாவ மன்னிப்புப்பெற, பாவத்திலிருந்து விடுதலை அடைய, புது புனித வாழ்க்கையாற்ற, பரிசுத்த வெற்றிவாழ்க்கை நடத்த ஒரே ஒரு வழிதானுண்டு. அந்த ஒரே ஈடு இணையற்ற தனிப்பெரும் வழி இறைவனாகிய இயேசு இரட்சகரே. "வருத்தப்பட்டுப் பாரஞ் சுமக்கிறவர்களே, நீங்களெல்லாரும் என்னிடத்தில் வாருங்கள்: நான் உங்களுக்கு இளைபாறுதல் தருவேன்" என்று வாக்களித்துள்ள எல்லாம் வல்ல இறைவனாகிய இயேசு இரட்சகரண்டை உடனே ஓடிவருவோம். பாவ மனஸ்தாப நொறுங்குண்ட நருங்குண்ட இதயத்தோடும் அவர் பாதத்தை இரட்சிப்புக்காக இறுக்க கட்டிப் பிடித்துக் கொள்வோமாக. பெருந்தீனி என்னும்



பெரும் பாதகத்தால் பெரும்பாடுபட்ட இப்பெண் இயேசு கிறிஸ்துவண்டை சென்று தன் பாவத்தை மனஸ்தாபக் கண்ணீரோடு அறிக்கையிட்டாள்: இயேசு இரட்சகரண்டை பாவமன்னிப்புக்காக கெஞ்சினாள்; அப்பாவத்திலின்றும் விடுதலைக்காக ஆண்டவரை வேண்டிக் கொண்டாள்; அப்பாவத்தின் மீது வெற்றி தருமாறு கிறிஸ்துவை நோக்கி ஊக்கத்தோடும் விசுவாசத்தோடும் ஜெபித்தாள் அப்பொழுது "என்னிடத்தில் வருகிறவனை நான் புறம்பே தள்ளுவதில்லை"என்று திருவாக்கருளியுள்ள இயேசு இரட்சகர் அவளை ஏற்றுக்கொண்டு அவளுக்கு பாவமன்னிப்பின் நிச்சயமளித்து, அவளைத் தமது பரிசுத்த இரத்தத்தால் சகல பாவங்களுமற கழுவிச் சுத்திகரித்து அவளைப் புது சிருஷ்டியாக்கி அவரே அவளுக்குள்ளிருந்து பரிசுத்தமாய், அன்பாய், அடக்கமாய், மீட்பாய் பொங்கி அருளிப்போந்தார். அவருடைய பழைய பெருந்தீனி இச்சைகளெல்லாம் ஒழிந்து போயின. எல்லாம் புதிதாயின. அவளுக்கு ஆண்டவர் புதிய இதயத்தையும், புதிய மனத்தையும், புதிய புனித உணர்ச்சிகளையும், இச்சையடக்கத்தையும், கொடுத்தார். அவள் கிறிஸ்துவுக்குள் புது சிருஷ்டியானது போல் இதை வாசிக்கிற நீயும் கிறிஸ்துவுக்குள் புது சிருஷ்டியாகி பரிசுத்த கிறிஸ்தவ வெற்றி வாழ்க்கை ஆற்ற முடியும். கிறிஸ்துவையல்லாமல் நம்மால் ஒன்றும் செய்ய இயலாது. "நம்மைப் பெலப்படுத்துகிற கிறிஸ்துவினாலே எல்லாவற்றையும் செய்ய நமக்குப் பெலனுண்டு." மனிதரால் கூடாதுதான். ஆனால் தேவனாலே எல்லாம் கூடும். "தேவனாலே கூடாத காரியம் ஒன்றுமில்லை."

# 6

# சோம்பல்

அக்காலத்தில் மட்டுமல்ல, இக்காலத்திலும் சோம்பல் மக்களைச் சொகுசாகத் தொட்டிலாட்டிக் கொல்லும் ஒரு கொடிய பாவமாகும். சோம்பல் மனிதனைக் கொல்லும் ஒரு கொடிய பாவமென்று சத்திய வேதாகமம் வெகு திட்ட வட்டமாக அறைகூவியுள்ளது. "சோம்பேறியின் கைகள் வேலை செய்யச் சம்மதியாததினால், அவன் ஆசை அவனைக் கொல்லும்"(நீதி. 21:25). "சோம்பல் தூங்கி விழப்பண்ணும்; அசதியானவன் பட்டினியாயிருப்பான்" (நீதி. 19:15) "பொல்லாதவனும் சோம்பலுமான பிரயோஜனமற்றவனுமான இந்த ஊழியக்காரனை புறம்பான இருளிலே தள்ளிப் போடுங்கள்; அங்கே அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்கும் (மத்.25:26-30). "ஆதலால் தூங்குகிற நீ விழித்து மரித்தோரை விட்டு எழுந்திரு. அப்பொழுது கிறிஸ்து உன்னைப் பிரகாசிப்பிப்பாரென்று சொல்லியிருக்கிறார்" (எபே.5:14). "நீங்கள் அசதியாயிராமல், வாக்குத்தத்தமான ஆசீர்வாதங்களை விசுவாசத்தினாலும் நீடியபொறுமையினாலும் சுதந்தரித்துக் கொள்கிறவர்களைப் பின்பற்றுகிறவர்களாயிருங்கள்" (எபி.6:11)

பரிசுத்த வேதாகமம் நமது சரீர சோம்பலையும், ஆத்தும சோம்பலையும், ஆவிக்குரிய சோம்பலையும் கண்டித்துணர்த்தியுள்ளது. ஆவிக்குரிய சோம்பல் நம்மை



அழிவுக்குட்படுத்தும். ஆகையால்தான் நாம் அசதியாயிராமல் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் ஆவியிலே அனல் உள்ளவர்களாய் இருக்கவேண்டுமென்று சத்திய வேதாகமம் பறைசாற்றியுள்ளது (ரோமர் 12:11). ஆவியிலே அசதியாயிருப்பது ஆண்டவருக்கு விரோதமான பாவமட்டுமல்ல, நமக்கும் விரோதமான பாவமாகும். நாம் சோம்பலுற்று காலா காலங்களில் செய்யவேண்டியவற்றைச் செய்யாமல் விட்டுவிடும்பொழுது, நமது வளர்ச்சி குன்றிவிடும். நமது முன்னேற்றம் பாதிக்கப்படும். நமது வாழ்வு கெட்டுவிடும், அழிவு ஏற்பட்டுவிடும். அந்தந்தக் காலத்தில் சொல்ல வேண்டியதைச் சொல்லி, சிந்திக்க வேண்டியதைச் சிந்தித்து, செயலாற்ற வேண்டியதைச் செயலாற்றி வந்தால் நாம் வாழ்வில் முன்னேறுவோம்; பிறரையும் வாழச்செய்வோம் நாம் தக்க காலத்தில் தக்கவிதமாய் நடந்திருந்தால் இச்சீரழிவு நேரிட்டிருக்காதே என்று எத்தனையோ வேலைகளில் நமது சோம்பலைக் குறித்து வருந்திக் கண்ணீர் சிந்தியிருக்கிறோம் அணை கடந்த வெள்ளம் அழுதாலும் வராது காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ள வேண்டும் உழுது பயிர் செய்யவேண்டிய காலத்தில் உறங்கிக்கிடந்தால், அறுவடைக்காலத்தில் அழுது நிற்க நேரிடும். "நன்று செய் அதனை இன்றே செய்; நாளை நமது நாளல்ல."

நாம் கால தாமதம் இன்றி உடனடியாகக் செய்ய வேண்டிய காரியங்கள் உண்டு அதி முக்கியமாக நமது ஆத்தும இரட்சிப்பைப்பற்றி நாம் அதிக அக்கறை உள்ளவர்களாக இருக்கவேண்டும். மறுமையில் மனந் திரும்புதல் இல்லை. நாம் இம்மையில் இருக்கும்பொழுதே மனந்திரும்பி, கிறிஸ்துவுக்குள் புது சிருஷ்டிகளாகிவிட வேண்டும். இயற்கையாக மாம்சத்தின் பிள்ளைகளாய் இருக்கும் நாம், இம்மையில் இருக்கும்பொழுதே தேவனுடைய பிள்ளைகளாகி விட வேண்டும். இயற்கையாகப் பாவிகளாகப்

பிறந்துள்ள நாம், கிறிஸ்துவுக்குள் மறுபடியும் பிறந்து, கிறிஸ்துவின் இரத்தப் புண்ணியத்தால் பாவ மன்னிப்புப் பெற்று இரட்சிப்பின் நிச்சயம் உள்ளவர்களாகிவிட வேண்டும். இம்மையில் இருக்கும்பொழுதே தேவனுடைய இராஜ்யத்தின் பிள்ளைகளாகிவிட வேண்டும். இவ்வுலகில் இருக்கும் பொழுதே கிறிஸ்துவை நமது சொந்த இரட்சகராக நமது சொந்தத் தெய்வமாக ஏற்றுக் கொள்ளாவிட்டால், நாம் மறுவுலகில் செல்லும்பொழுது இயேசு இரட்சகர் நம்மை மோட்ச இராஜ்யத்தில் ஏற்றுக் கொள்ளுவார் என்பதை எப்படி எதிர் பார்க்கலாம்? நாம் இவ்வுலகில் இருக்கும் பொழுதே கிறிஸ்துவோடு வாழாவிட்டால், நாம் மறு உலகில் பிரவேசித்த பிறகு கிறிஸ்துவோடு வாழ்வோம் என்று எப்படி நம்பிக் கொண்டிருக்கலாம்; எனவே. இம்மையில் இருக்கும் பொழுதே இயேசு கிறிஸ்துவை நமது சொந்தத் தெய்வமாகவும், இரட்சகராகவும் ஏற்றுக் கொள்வது மகா முக்கியமான காரியமாகும். இதைச் செய்வதற்குச் சோம்பல்பட்டு அசதியுற்று, காலதாமதம் செய்வது ஆபத்தாக முடியும். இந்த ஆபத்து இவ்வுலகத்தோடு நில்லாமல் மறு உலகத்துக்கும் தொடர்ந்து வந்து நித்திய கால ஆபத்தாக வந்து முடியும் ஆகவே இவ்வளவு பெரிதான இரட்சிப்பைக் குறித்துக் கவலையற்றிருப்போமானால் வரும் தண்டனைக்கு எப்படித் தப்புவித்துக் கொள்வோம்? இன்றே இரட்சண்ய நாள், சோம்பல் படாது இன்றே இரட்சிப்பைப் பெற்றுக் கொள்வோமாக. அசதியுறாமல் உடனே இயேசு இரட்சகரை ஏற்றுக் கொள்ளுவோமாக. அதில் கால தாமதம் செய்து அஜாக்கிரதையாய் இருந்தால், நித்திய காலமாக நித்திய நரக வேதனையை அடைய வேண்டியதிருக்கும். எனவே, சோம்பல் நம்மை எரிநரகத்துக்குள் தள்ளிவிடும்.

போரில் ஏற்படும் தோல்விகளுக்கும், வாழ்வில் ஏற்படும் தோல்விகளுக்கும் ஒரு காரணம் சோம்பல்



சோம்பலால், தூக்க மயக்கத்தால் அனுதினமும் அநேக விபத்துக்கள் ஏற்பட்டு அநேகர் உயிர் இழக்கின்றனர், ஆவிக்குரிய போராட்டத்தில் தோல்வி ஏற்படுவதற்கும், ஆவிக்குரிய விபத்து உண்டாவதற்கும் ஒரு காரணம் சோம்பலாகும். "ஆதலால் தூங்குகிற நீ விழித்து,, மரித்தோரை விட்டு எழுந்திரு அப்பொழுது கிறிஸ்து உன்னைப் பிரகாசிப்பாரென்று சொல்லியிருக்கிறார்" (எபே.5:14)

சோம்பல் சரீர சுகத்தைக் கெடுக்கும். ஆத்தும சுகத்தை அழிக்கும். அஜாக்கிரதையால் அழிவுற்ற மக்கள் அனந்கம் பேர். அவதியால் நாசமுற்ற தேசங்கள் பலபல. அசமந்தத்தால் வீதிகளிலும், சாலைகளிலும் ஏற்படும் சாவுகள் கணக்கற்றவை எனவே ஆணவத்தைப்போல் அசதியும் மனிதனைக் கொல்ல வல்ல கொடியதொரு பாவமாகும்.

நாம் இவ்வுலகில் இருக்கும்பொழுது ஆவிக்குரிய காரியங்களில் செய்யவேண்டியவைகளைச் செய்யாமல் நிர்விசாரமாய் இருந்தால், நாம் மறுமையில் நரகம் செல்வது நிச்சயம். ஆணவம், கோபம், பொறாமை, வேசித்தனம், காமவிகாரம், கொலைபாதகம், சூனியம், விக்கிரக ஆராதனை, பொய், அவிசுவாசம் போன்ற பாவத்துக் குட்பட்டவர்கள் நித்திய நரக அக்கினையிலே பங்கு பெறுவது போல், இரட்சிப்பைக் குறித்து நிர்விசாரிகளாய் இருப்பவர்களும் நித்திய நரக அக்கினையிலே பங்கு பெறுவது திண்ணம். ஆண்டவர் இந்த உண்மையை ஓர் உவமை வாயிலாக நமக்கு நன்கு விளக்கிக் காட்டியிருக்கிறார் தாலந்து உவமையில் ஒரு தாலந்தை வாங்கினவன் வந்து "ஆண்டவனே, நீர் விதைக்காத இடத்தில் அறுக்கிறவரும், தெளிக்காத இடத்தில் சேர்க்கிறவருமான கடினமுள்ள மனுஷன் என்று அறிவேன். ஆகையால், நான் பயந்துபோய், உமது தாலந்தை நிலத்தில் புதைத்து வைத்தேன்; இதோ, உம்முடையதை வாங்கிக் கொள்ளும் என்றான் அவனுடைய

எஜமான் பிரதியுத்திரமாக: பொல்லாதவனும், சோம்பலுமான ஊழியக்காரனே: நான் விதைக்காத இடத்தில் அறுக்கிறவனென்றும் தெளிக்காத இடத்தில் சேர்க்கிறவனென்றும் அறிந்திருந்தாயே, அப்படியானால் நீ என் பணத்தைக்காசுக்காரர் வசத்தில் போட்டு வைக்க வேண்டியதாயிருந்தது; அப்பொழுது நான் வந்து என்னுடையதை வட்டியோடே வாங்கிக்கொள்வேனே என்று சொல்லி, அவனிடத்திலிருக்கிற தாலந்தை எடுத்து பத்துத் தாலந்துள்ளவனுக்குக் கொடுங்கள், உள்ளவனெவனோ அவனுக்குக் கொடுக்கப்படும், பரிபூரணமும் அடைவான்; இல்லாதவனிடத்திலிருந்து உள்ளதும் எடுத்துக் கொள்ளப்படும். பிரயோஜனமற்ற ஊழியக்காரனாகிய இவனைப் புறம்பான இருளிலே தள்ளிப்போடுங்கள்: அங்கே அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்கும் என்றான்" (மத் 25:24-30)

இந்த உவமையில் ஒரு தாலந்தை வாங்கினவன் இருளிலே தள்ளப்பட்டதற்குக் காரணம் கொலை பாதகமல்ல, விபசாரமுமல்ல, சோம்பலாகும். அவன் செய்ய வேண்டியதைச் செய்யாமல், சோம்பலுள்ளவனாய்க் காலத்தை வீணாகக் கடத்தின காரணத்தால் அவன் ஆக்கினை அடைந்தான்

புத்தியில்லாத ஐந்து கன்னிகைகள் கலியாண வீட்டிற்குள் பிரவேசிக்க முடியாது போய்விட்டதற்குக் காரணம் வேசித்தனமல்ல, பொய்யும் களவுமல்ல, சோம்பலேயாகும். அவர்கள் தீவட்டிகளோடு எண்ணெயும் கூடக் கொண்டு போவதற்குச் சோம்பல்பட்டு விட்டார்கள். அவர்கள் ஜாக்கிரத்தையுள்ளவர்களாய்க் காலா காலத்தில் வாங்கி வைத்துக் கொள்ளவேண்டிய எண்ணெயையும் வாங்கி வைத்திருப்பார்களானால், அவர்களும் தாராளமாய்க் கலியாண வீட்டிற்குள் பிரவேசித்துக் களிப்படைந்திருப்பார்கள். ஆனால் அவர்களுடைய அஜாக்கிரதையின் காரணமாக பிந்தி வந்து: "ஆண்டவரே, ஆண்டவரே



எங்களுக்குத் திறக்க வேண்டும்" என்று கேட்டபொழுது, ஆண்டவர்; "உங்களை அறியேன் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்"(மத் 25:11,12).

அசதி அல்லது சோம்பல் ஆக்கத்தை அழித்துவிடும். தோல்வியைப் புகுத்திவிடும், நஷ்டத்தைத் திணித்துவிடும். சோம்பல் புகுந்த இடத்தில் அழிவும் புகுந்துவிடும். படிக்க வேண்டிய காலத்தில் சோம்பலுற்றுப் படிக்காமல் நிர்விசாரமாய் இருக்கிற மாணவர் பரீட்சையில் எப்படி வெற்றி பெற இயலும்? தொழிற்சாலைகளிலோ, கல்விச் சாலைகளிலோ, எந்த அலுவலகங்களிலோ, அசதி ஆட்சி புரிந்தால்அவை வீழ்ச்சியுறுவது அதி நிச்சயம்

சோம்பேறிகளால் குட்டிச்சுவராய்ப்போன வீடுகள் ஏராளம், நாசமாய்ப்போன நாடுகள் ஏராளம், கெட்டழிந்த குடும்பங்கள் ஏராளம், உடைந்துபோன உள்ளங்கள் ஏராளம், இடிந்துபோன இதயங்கள் ஏராளம்.

இவ்வுலகில்இருக்கும்பொழுது நாம் செய்த பாவங்களுக்கு மாத்திரமல்ல, நாம் செய்யாமல் விட்டுவிட்ட நன்மைகளுக்காகவும், நாம் மறுமையில் நியாயந்தீர்க்கப்பட்டு ஆக்கினை அடைவோம்.

"ஒருவன் நன்மை செய்ய அறிந்தவனாயிருந்தும், அதைச் செய்யாமற்போனால், அது அவனுக்குப் பாவமாயிருக்கும்" (யாக். 4:17).

துயருற்ற மனிதனுக்கு நாம் சொல்லாமல் விட்ட ஆறுதலுக்காகவும், பாவத்தில் வாழ்கிறவனுக்கு நாம் இயம்பாதுவிட்ட எச்சரிப்புக்காகவும், அறியாத மக்களுக்காக நாம் இயேசு இரட்சகரைப்பற்றி அறிவிக்காத அஜாக்கிரதைக்காகவும், சோம்பல் காரணத்தால் வியாதியாயிருந்தவனைப் போய்ப் பார்த்து உதவி செய்யாத குற்றத்திற்காகவும், ப[illegible]யும்

பட்டினியுமாயிருக்கிறவர்களையும் கண்ணீரும் கம்பலையுமாயிருப்பவர்களையும் போய்ப் பார்த்து உதவி செய்யாத நிர்விசாரத்திற்காகவும், நாம் கடைசி நாளில் நியாயந்தீர்க்கப்பட்டு நித்திய நரகாக்கினை பெறுவோம் செய்ய வேண்டிய நன்மைகளை யார் யார் அக்கறையோடு செய்யாது விட்டார்களோ அவர்களைப் பார்த்து நியாயத்தீர்ப்பு நாளில் ஆண்டவர்: "மிகவும் சிறியவர்களாகிய இவர்களில் ஒருவனுக்கு நீங்கள் எதைச் செய்யாதிருந்தீர்களோ, அதை எனக்கே செய்யாதிருந்தீர்கள் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்பார், அந்தப்படி இவர்கள் நித்திய ஆக்கினையை அடையப்போவார்கள் என்றார்" (மத் 25:45,46)

சோம்பல் காரணமாக எத்தனையோ பேர் ஆலயம் சென்று ஆண்டவரை ஆராதிப்பதில்லை வாரம் முழுவதும் அலுவலகத்தில் ஓயாது ஒழியாது வேலை செய்துவிட்டோம்; இந்த ஞாயிறுக்கிழமையிலாவது கொஞ்சம் தூங்கிக் கொள்ளலாமே என்கிறார்கள். வாரம் முழுவதும் வயிற்றைப் போஷிப்பதற்கான அலுவலகம் சென்றவர்கள், இந்த ஞாயிற்றுக்கிழமை ஒரு நாளாகிலும் ஆலயம் சென்று ஆத்துமாவைப் போஷிக்காவிட்டால், அவர்களுடைய ஆத்துமா அழிந்துபோகுமே என்பதைப்பற்றி கவலையற்று அசதியாயிருக்கிறார்கள். ஆண்டவர் தாம் மாம்சத்திலிருந்த நாள்களில் ஆலயத்திற்கு ஒழுங்காகச் சென்றார் அதுபோல் நாமும் ஆலயம் செல்வதற்குச் சோம்பல் படாதிருப்போமாக ஆலயம் செல்வதில் அசதியாயிருக்கிறவர்கள் தங்கள் ஆத்துமாக்களைப் பட்டினிபோட்டுக் கொல்லுகிறார்கள்

அநேகர் சோம்பல் காரணமாக ஒழுங்காக ஜெபம் செய்கிறதில்லை அதிகாலையில் எழுந்து ஜெபம் செய்வதில் அசதியாயிருக்கிறோம். தூக்க மயக்கம் நமது ஜெபவாழ்க்கையைச் சீர்குலைத்து விட்டது. ஆகையால்தான் ஆண்டவர்



"நீங்கள் விழித்திருந்து ஜெபம்பண்ணுங்கள்" என்று அறிவுரை பகர்ந்துள்ளார் நாம் இடைவிடாமல் ஜெபித்து, கிறிஸ்துவோடு எப்பொழுதும் உறவாடி ஐக்கியப்பட்டிருக்க வேண்டியவர்கள், கொடியானது செடியில் நிலைத்திருப்பதுபோல, நாம் கிறிஸ்துவில் நிலைத்திருக்க வேண்டும் இந்த அந்நியோன்னிய ஐக்கியம் கொள்ளுவதற்கு அசதியுற்றால் அழிவது திண்ணம் ஆகையால் தான் பரிசுத்த பவுல்: "இடைவிடாமல் ஜெபம்பண்ணுங்கள்"(1 தெச 5:17) என்று பறைசாற்றியுள்ளார். ஜெபவாழ்க்கையில் நாம் தூங்கி வீழ்ந்தால், நமது ஆவிக்குரிய வாழ்க்கையும் தூங்கி வீழ்ந்து அழிவுக்குட்படும். எனவே, நாம் தூக்க மயக்கத்தை ஒழித்துவிட்டு, சோம்பலை உதறிவிட்டு, விழித்திருந்து எப்பொழுதும் ஜெபிக்கவேண்டும் அதிகாலை ஜெபத்தை அசட்டை பண்ணுகிறவர்கள் அதிக அல்லலுறுவார்கள் நமது ஒன்றுமில்லாமை அறிந்து, ஒவ்வொரு நாளும் அதிகாலையில் எழுந்து, விசுவாசக் கரம் நீட்டி, கிறிஸ்துவின் ஆவியானவரின் அருளையும் வல்லமையையும் நிரம்பப் பெற்றுக்கொள்ள வேண்டும். இதில் நிர்விசாரம் கொண்டால் நாம் மாண்டுபோவோம்

இங்கிலாந்து அரசியைப் பார்ப்பதற்கு குறிப்பிட்ட நேரந்தவறாமல் சென்றுவிடுவோம். அமெரிக்க ஜனாதிபதியைப் பார்ப்பதற்கோ அல்லது இந்திய ஜனாதிபதியைப் பார்ப்பதற்கோ வென்றால் குறித்த நேரந்தவறாமல் முன் ஆயத்தத்தோடு கவனமாய்ச் சரியான நேரத்திற்குச் சென்று விடுவோம். ஆனால் ஆண்டவரைச் சந்திப்பதற்கோ நாம் குறிப்பிட்ட அதிகாலை நேரத்தில் எழும்பி ஜெபிப்பதற்கு சோம்பல் கொண்டு, தூங்கிவிடுகிறோம். ஆண்டவரோடு ஜெபத்தில் அந்நியோன்னியமாவதற்கு அவ்வளவு, அசதி! அவ்வளவு அஜாக்கிரதை! அவ்வளவு சோம்பல்!

கர்த்தரோடு பேசுவதற்குச் சோம்பல் கொள்ளுகிறது போல், கர்த்தர் நம்மோடு பேசுவதைக் கேட்பதற்கும்

அவ்வளவு சோம்பல் கொள்ளுகிறோம், கர்த்தருடைய வசனத்தை வாசிப்பதில் எவ்வளவு சோம்பல். தற்கால மக்கள் எதைஎதையோ வாசிப்பதற்குத் தயங்குவதில்லை; ஆனால் வேதம் வாசிப்பதற்குத்தான் அவ்வளவு அசதி ஏற்பட்டுவிடுகிறது. வேதவாசிப்பில் நமக்கு அக்கறையில்லா விட்டால் நமது ஆத்துமா பட்டினிகிடந்து செத்துவிடும் "நீங்கள் வளரும்படி புதிதாகப் பிறந்த குழந்தைகளைப் போல, திருவசனமாகிய களங்கமில்லாத ஞானப்பாலின் மேல் வாஞ்சையாயிருங்கள்"(1 பேதுரு 2:2). அநேகர் கிறிஸ்தவ ஜீவியத்தில் வளர்ச்சியுறாதிருப்பதற்குக் காரணம், அவர்கள் கர்த்தருடைய வசனத்தை ஒழுங்காய் வாசித்து தியானித்து உட்கொள்ளாதிருப்பதுதான். அவர்கள் கர்த்தருடைய வசனத்தை வாசியாதிருப்பதற்குக் காரணம் சோம்பல் தான். கர்த்தருடைய வேதத்தை நேசிக்கிறவர் களுக்கு மிகுந்த சமாதானமுண்டு, அவர்களுக்கு இடறலில்லை. அநேகமாயிரம் பொன் வெள்ளியைப் பார்க்கிலும் கர்த்தர் விளம்பின வேதமே நமக்கு நலம். கர்த்தருடைய வேதம் தேனிலும் மதுரமானது; தெளிதேனிலும் தித்திப்பானது. ஆகையால் கர்த்தருடைய வசனத்தைத் தியானிக்கும்படி குறித்த ஜாமங்களுக்கு முன்னே என் கண்கள் விழித்துக்கொள்ளும் என்று சங்கீதக்காரன் செப்பியுள்ளான். அந்தக் கிறிஸ்துவ விசுவாசிகளின் அகத்திலும் முகத்திலும் அருள், அன்பு, ஆனந்தம் பொங்கி வழிகின்றனவே: அந்தக் கிறிஸ்தவன் பரிசுத்த கிறிஸ்தவ வெற்றி வாழ்க்கை நடத்துகிறானே; என் வாழ்விலோ எப்பொழுதும் தோல்வி! என் முகத்திலோ எப்பொழுதும் இருள். இதற்குக் காரணம் யாதென்று அதிசயித்துக் கொண்டிருக்கும் நண்பரே, இரகசியம் சொல்கிறேன் கேளும். "அவர்கள் சோம்பல்படாமல் தினமும் அதிகாலையிலெழுந்து, வேதம் வாசித்து கிறிஸ்துவோடு ஐக்கியமாகி அந்த நாளுக்கு வேண்டிய சக்தியையும் ஆசீர்வாதங்களையும், பரிசுத்த வல்லமையையும் விசுவாசகரம் நீட்டி, கிறிஸ்துவிடமிருந்து



பெற்றுக் கொள்கிறார்கள் ஆகையால் அந்த விசுவாசிகளுடைய அகத்திலும் அருள் பொங்கி வழிகிறது அவர்கள் வாழ்வு வெற்றி சிறந்து மிளிர்கிறது. ஆனால் நீயோ, அந்த நாளை துவங்குமுன் அந்நாளுக்கு வேண்டிய ஆசீர்வாதங்களை ஆண்டவரிடமிருந்து பெறவேண்டிய அதிகாலை நேரத்தில் எழும்பி வேதம் வாசித்து ஜெபம் செய்யாது சோம்பல் கொண்டு, தூங்கி கிடக்கிறாய். சோம்பல், நீ பெறவேண்டிய ஆசீர்வாதத்தைப் பெறாதபடிக்குத் தடுத்து நிறுத்திவிடுகிறது

உன் வாழ்க்கையில் எத்தனையோ நபரோடு நீ பழகியுள்ளாய், ஒவ்வொரு நாளும் எத்தனையோ பேர் உன்னோடு பழகுகிறார்கள் அவர்களில் எத்தனையோ பேர் கிறிஸ்துவைப் பற்றி சிறிதும் அறியாதவர்கள் அவர்கள் இயேசு கிறிஸ்துவை அறியாது நரகம் சென்றால், அதற்கொரு காரணம் உனது சோம்பல்தானல்லவா? நீ அவர்களுக்குக் கிறிஸ்துவைப் பற்றி அறிவிக்க சோம்பல் கொண்ட காரணத்தாலல்லவோ அவர்கள் நரகம் சென்றுள்ளார்கள் கிறிஸ்துவுக்குச் சாட்சி பகருவதில்தான் உனக்கு எவ்வளவு சோம்பல்! உனக்கு எவ்வளவு நிர்விசாரம்! கிறிஸ்துவை பிறருக்குக்கூறி அறிவிப்பதில் நாம் எவ்வளவு அக்கறை காட்டவேண்டும் இதிலுமா சோம்பல்! நமது சோம்பல் நம்மையும் இன்னும் எத்தனையோ ஆத்துமாக்களையும் எரி நரகத்துக்குள் பிடித்துத்தள்ளிவிடுகிறதே. சுவிசேஷத் திருப்பணியில் அயர்ந்து தூங்கிக்கொண்டிக்கிற நாம் விழித்தெழும்புவோமாக. ஆத்தும ஆதாயம் செய்வதில் ஆர்வம் கொள்வோமாக. சுவிசேஷத்தைப் பிரசங்கியாதிருந்தால் எனக்கு ஐயோ என்ற துடிப்புக் கொண்டெழுவோமாக "அவனுடைய காவற்காரர் எல்லாரும் என்றும் அறியாத குருடர்; அவர்களெல்லாரும் குலைக்க மாட்டாத ஊமையான நாய்கள்; தூக்கமயக்கமாய்ப் புலம்புகிறார்கள்,

படுத்துக்கொள்ளுகிறார்கள், நித்திரைப் பிரியர்"(ஏசாயா 56:10) "அசதியாயிராமல் ஜாக்கிரதையாக இருங்கள்; ஆவியிலே அனலாயிருங்கள்; கர்த்தருக்கு ஊழியஞ் செய்யுங்கள்" (ரோமர் 12:11).

மனந்திரும்புவற்குச் சோம்பல் மன்னிப்புப் பெறுதற்குச் சோம்பல் , இரட்சிக்கப்படுவதற்குச் சோம்பல்; கிறிஸ்துவை ஏற்றுக்கொள்வதற்குச் சோம்பல், பரிசுத்தம் அடைவதற்குச் சோம்பல்; ஜெபிப்பதற்குச் சோம்பல்; வேதம் வாசிப்பதற்குச் சோம்பல்; கிறிஸ்துவைத் தியானிப்பதற்குச் சோம்பல்; இடைவிடாமல் இயேசுவில் நிலைத்திருப்பதற்குச் சோம்பல்; சுவிசேஷ ஊழியத்தில் சோம்பல்; சாட்சி பகருவதில் சோம்பல்; ஆத்தும ஆதாயம் செய்வதில் சோம்பல்; ஓர் ஆறுதலான சொல் சொல்வதில் சோம்பல்; ஒரு சிறு நன்மை செய்வதில் சோம்பல்; ஒரு தம்ளர் தண்ணீர் கொடுப்பதற்குச் சோம்பல்; ஒரு பிடி அன்னம் கொடுப்பதற்குச் சோம்பல்; ஒரு கந்தைத் துணி கொடுப்பதற்கு சோம்பல்; பிணியாளிகளைப் போய்ப்பார்ப்பதற்குச் சோம்பல்; தங்களுக்கு அருமையானவர்களை இழக்கக் கொடுத்தவர்களுக்கு ஓர் ஆறுதல்மொழி சொல்வதற்குச் சோம்பல்; ஒரு மரியாதை சொல் சொல்வதற்குச் சோம்பல்; குளிப்பதற்குச் சோம்பல்; உடலைக் சுத்தமாக வைப்பதற்குச் சோம்பல்; ஒரு புன்னகை காட்டி ஒரு புண்பட்ட உள்ளத்தைத் தேற்றுவதற்குச் சோம்பல். அதைரியப்பட்டுக்கிடப்போரை ஓர் உற்சாகச் சொல் கூறி ஊக்கப்படுத்துவதற்குச் சோம்பல். ஏழைகளையும், அனாதைகளையும், விதவைகளையும், திக்கற்றோர்களையும் ஆதரிப்பற்குச் சோம்பல்; ஆலயம் செல்வதற்குச் சோம்பல்; தசமபாகம் கொடுப்பதற்குச் சோம்பல்; கிறிஸ்தவ புத்தகங்கள் படிப்பதற்குச் சோம்பல்; ஊர் ஊராய்த் தெருத் தெருவாய் நடந்து சென்று சுவிசேஷத்தைக்கூறி அறிவிப்பதற்குச் சோம்பல். நீங்கள் அசதியாயிராமல் வாக்குத்தத்தமான



ஆசீர்வாதங்களை விசுவாசத்தினாலும், நீடிய பொறுமையினாலும் சுதந்தரித்துக் கொள்ளுகிறவர்களைப் பின்பற்றுகிறவர்களாயிருந்து, உங்களுக்கு நம்பிக்கையின் பூரண நிச்சயமுண்டாகும்படி நீங்கள் யாவரும் முடிவு பரியந்தம் அப்படியே ஜாக்கிரதையைக் காண்பிக்க வேண்டுமென்று ஆசையாயிருக்கிறோம்" (எபி 6:11,12)

மார்ட்டின் லூத்தர் ஒரு பிரசங்கத்தில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்: சாத்தான் ஒரு மாநாடு கூட்டி, தன்னுடைய தூதர்களையெல்லாம் அதற்கு வரவழைத்து, அவர்கள் செய்துவரும் தொண்டுகளைப்பற்றி அறிக்கை சமர்ப்பிக்குமாறு ஆணையிட்டான் அப்பொழுது அம் மாநாட்டில் ஒரு பேய் எழுந்து நின்று: "கிறிஸ்தவர்களில் சிலர் கூட்டமாக ஒரு வனாந்தரத்தைக் கடந்து கொண்டிருக்கும் பொழுது நான் காட்டு விலங்குகளை ஏவி அவர்களைக் கொன்றொழிக்குமாறு தூண்டிவேன் அவ்வாறே அக் கிறிஸ்தவர்களை அவ்வன விலங்குகள் பீறிப் பட்சித்துப் போட்டன. அவர்களுடைய எலும்புகள் இப்பொழுது வனாந்தரத்தில் உலர்ந்த கொண்டிருக்கின்றன" என்று கர்ச்சித்தது அப்பொழுது சாத்தான் மாறுத்தரமாக: "அவர்களுடைய சரீரம் செத்து எலும்புகள் உலர்ந்தால் நமக்கு யாது பயன்? அவர்களுடைய ஆத்துமாக்களெல்லாம் இரட்சிக்கப்பட்டு விட்டனவே!" என்றான். இன்னொரு பேய் எழுந்து நின்று: "கிறிஸ்தவர்கள் குழுமியிருந்த ஒரு கப்பல்மீது பலத்த காற்று அடிக்குமாறு செய்து, அக் கப்பலை மூழ்கச் செய்தேன்" என்றது அப்பொழுது சாத்தான் அதற்கு விடையாக, "அக்கிறிஸ்தவர்கள் கடலில் மூழ்கிச் செத்துப் போனதால் நமக்கு இலாபம் என்ன? அவர்களுடைய ஆத்துமாக்களெல்லாம் இரட்சிக்கப்பட்டு விட்டனவே" என்றான். மற்றொரு பேய் எழும்பி நின்று: "ஒரு மனிதனை ஆத்தும இரட்சிப்பைப்பற்றிக் கவலையற்று

நிர்விசாரமாய் இருக்குமாறு, பின்னர் மனந்திரும்பிக் கொள்ளலாமென்றும் பத்து ஆண்டுகளாகச் சோம்பலோடு நிர்விசாரமாய் இருக்குமாறு செய்துவிட்டேன். இப்பொழுது அவன் நம்முடையவன்" என்றது. அப்பொழுது சாத்தான் வெற்றிமுரசு கொட்டி அப்பேயைப் பாராட்டிப் பெரிதும் அகமகிழ்ந்தான். நரகமும் பேய்கணங்களும் பூரித்து ஆரவாரம் செய்தன.

சோம்பல் காரணமாக எண்ணிறந்த ஆத்துமாக்கள் நரகம் செல்லுகிறார்கள் நம்மை நரக அக்கினிக் கடலில் தள்ளும் சோம்பலைக் குறித்து நாம் மிக மிக ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். வெளிப்பார்வைக்கு வெகு அற்பமாகத் தோன்றும் சோம்பல் நம்மையும் நம் சரீரத்தையும் ஆவியையும், ஆத்துமாவையும் அழித்துவிடும் கொடிய பயங்கர பாவமாகும். நாம் உடனே, இன்றே மனந்திரும்பி இயேசு இரட்சகரை நம் சொந்த இரட்சகராக ஏற்றுக் கொள்ளாதபடி நம்மைத் தடுத்து நிற்பது சோம்பலே. இயேசு இரட்சகரை ஏற்றுக்கொள்ளாவிட்டால் நாம் நரக ஆக்கினை அடைவது அதிக நிச்சயம் (யோவான் 3:18,36) என்னும் உண்மை நன்கு தெரிந்திருந்தும், அநேகர் இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து அவரைத் தங்கள் சொந்த இரட்சகராக ஏற்றுக் கொள்ளாததற்குக் காரணம் சோம்பலே, அசதியே, நிர்விசாரமே, பின்னால் பார்த்துக்கொள்ளலாம் என்ற காலதாமதமே, அசமந்தமே, அசட்டையேயாகும்.

இந்தச் சோம்பல் என்னும் பாவத்தை நாம் நினைத்து மனம் வருந்தி அதைக் கர்த்தரிடம் அறிக்கையிடுவோமாக. நீ இன்னும் இரட்சிக்கப்படாவிட்டால், இந்த நிமிடத்தில் தானே, இதனைப் படித்துக்கொண்டிருக்கும்போதுதானே இப்புத்தகத்தைக் கீழே வைத்துவிட்டு மனந்திரும்பி பாவ மனஸ்தாபக் கண்ணீரோடு இயேசு கிறிஸ்துவை உன் சொந்த இரட்சகராக, தெய்வமாக ஏற்றுக்கொள். இப்பொழுது நீ



மனந்திரும்பாவிட்டால் நீ அழிவது திண்ணம். "இவ்வளவு பெரிதான இரட்சிப்பைக் குறித்து நாம் கவலையற்றிருப்போமானால், தண்டனைக்கு எப்படித் தப்பித்துக் கொள்ளுவோம்" (எபி.2:4)

# 7

# பேராசை

'பேராசை பெருநஷ்டம்', 'போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து.' "போதுமென்ற மனதுடனே கூடிய தேவ பக்தியே மிகுந்த ஆதாயம். உலகத்தில் நாம் ஒன்றும் கொண்டு வந்ததுமில்லை, இதிலிருந்து நாம் ஒன்றும் கொண்டு போவதுமில்லை என்பது நிச்சயம். உண்ணவும் உடுக்கவும் நமக்கு உண்டாயிருந்தால் அது போதுமென்றிருக்கக்கடவோம். ஐசுவரியவான்களாக விரும்புகிறவர்கள் சோதனையிலும், கண்ணியிலும் மனுஷரைக் கேட்டிலும் அழிவிலும் அமிழ்த்துகிற மதிகேடும் சேதமுமான பலவித இச்சைகளிலும் விழுகிறார்கள். பண ஆசை எல்லாத் தீமைக்கும் வேராயிருக்கிறது; சிலர் அதை இச்சித்து, விசுவாசத்தை விட்டு வழுவி, அநேக வேதனைகளாலே தங்களை உருவக் குத்திக்கொண்டிருக்கிறார்கள். நீயோ தேவனுடைய மனுஷனே, இவைகளை விட்டோடி, நீதியையும், தேவபக்தியையும், விசுவாசத்தையும், அன்பையும், பொறுமையையும், சாந்த குணத்தையும் அடையும்படி நாடு விசுவாசத்தின் நல்ல போராட்டத்தைப் போராடு, நித்திய ஜீவனைப்பற்றிக்கொள்; அதற்காகவே நீ அழைக்கப்பட்டாய்" (1 தீமோ. 6:6-12)

மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை கொண்டு உயிர் இழந்தோர் பலர் பலர் பிறர் பொருள்கள் மீது ஆசைகொண்டு அவமானம் அடைந்தோர் பலர் பலர். தகாத இன்பங்களில் ஆசை கொண்டு வாழ்வு இழந்தோர் பலர் பலர். கண்களின் இச்சைகளால் இழுப்புண்டு, நல்வாழ்வை நழுவ விட்டோர் பலர் பலர். நமது ஆதிபெற்றோர் கண்களின் ஆசை இச்சைகளால் கவரப்பட்டு தங்கள் பேரின்ப வாழ்வை இழந்தார்கள் ஆசைக்கு அடிமைப்பட்டதால், பரதீசு வாழ்வையே பறிகொடுத்து விட்டார்கள். "அப்பொழுது ஏவாள் அந்த விருட்சம் புசிப்புக்கு நல்லதும், பார்வைக்கு இன்பமும், புத்தியைத் தெளிவிக்கிறதற்கு இச்சிக்கப்படத்தக்க விருட்சமுமாய் இருக்கிறது என்று கண்டு அதன் கனியைப் பறித்து, புசித்து, தன் புருஷனுக்கும் கொடுத்தாள். அவனும் புசித்தான்" (ஆதி 3:6). நமக்கு எது வேண்டாம் என்று ஆண்டவருக்குத்தான் சரியாய்த் தெரியும். அவர் வேண்டாம் என்று தடுத்துள்ள பொருள் மீது, அல்லது இன்பத்தின்மீது அல்லது வேறெந்த காரியத்தின்மீதும் நாம் ஆசை கொண்டால் அவதியுறுவது அதிக நிச்சயம்

பிறர் பொருளுக்கு ஆசைப்படுவது பெரும்பாவமாகும். "பிறர் பொருளை இச்சியாதிருப்பாயாக; பிறருடைய வீட்டை இச்சியாதிருப்பாயாக; பிறனுடைய மனைவியையும், அவனுடைய வேலைக்காரனையும், அவனுடைய வேலைக்காரியையும், அவனுடைய எருதையும், அவனுடைய கழுதையையும், இன்னும் பிறனுக்குள்ள யாதொன்றையும் இச்சியாதிருப்பாயாக" என்பது ஆண்டவர் விடுத்துள்ள கற்பனையாகும். ஆண்டவர் இட்ட இந்தக் கட்டளையை மீறுவது பெரும் பாவமாகும். ஆண்டவருடைய ஆணையை மீறி, பிறர் பொருளுக்கு ஆசைப்படுகிறவர்களை அந்த ஆசையே கொன்றுவிடும். ஆகாப் அரசன் பிறர் பொருளுக்கு ஆசைப்பட்டான். அந்த ஆசை அவன் உயிருக்கே உலை வைத்துவிட்டது. ஆகாப் அரசன் நாபோத்தின் திராட்சைத் தோட்டத்திற்கு ஆசைப்பட்டான். அந்த ஆசை நாபோத்

கொலை செய்யப்படுவதற்குக் காரணமானது. நாபோத்தைக் கொன்று அவனுடைய திராட்சைத் தோட்டத்தைத் தனக்குச் சொந்தமாய் எடுத்துக் கொள்ளும்படி, ஆகாப் எழுந்து போனபோது கர்த்தர் எலியா தீர்க்கதரிசியை அவனிடம் அனுப்பி பின் வருமாறு கூறச் சொன்னார்: "ஆகாபே, நீ (நாபோத்தைக்) கொலை செய்ததும் அவனுடைய திராட்சைத் தோட்டத்தை எடுத்துக் கொண்டதும் இல்லையோ. நாய்கள் நாபோத்தின் இரத்தத்தை நக்கின ஸ்தலத்திலே உன்னுடைய இரத்தத்தையும் நாய்கள் நக்கும், ஆண்டவர் உன்மேல் பொல்லாப்பு வரப் பண்ணி, உன் சந்ததியை அழித்துப் போட்டு, ஆகாப்புக்குச் சுவரில் நீர் விடும் ஒரு நாயாகிலும் இராதபடிக்குச் செய்வார்" *(1 இரா. 21:19)*

"இயேசு அவர்களை நோக்கி: பொருளாசையைக் குறித்து எச்சரிக்கையாயிருங்கள்; ஏனெனில் ஒருவனுக்கு எவ்வளவு திரளான ஆஸ்தி இருந்தாலும் அது அவனுக்கு ஜீவன் அல்ல என்றார். அல்லாமலும், ஒரு உவமையை அவர்களுக்குச் சொன்னார். ஐசுவரியமுள்ள ஒருவனுடைய நிலம் நன்றாய் விளைந்தது. அப்பொழுது அவன்: நான் என்ன செய்வேன்? என் தானியங்களைச் சேர்த்து வைக்கிறதற்கு இடமில்லையே; நான் ஒன்று செய்வேன், என் களஞ்சியங்களை இடித்து, பெரிதாகக் கட்டி, எனக்கு விளைந்த தானியத்தையும் என் பொருள்களையும் அங்கே சேர்த்து வைத்து. பின்பு: ஆத்துமாவே, உனக்காக அநேக வருடங்களுக்கு அநேகம் பொருள்கள் சேர்த்து வைக்கப் பட்டிருக்கிறது. நீ இளைப்பாறி, புசித்துக் குடித்து, பூரிப்பாயிரு என்று என் ஆத்துமாவோடே சொல்லுவேன் என்று தனக்குள்ளே சிந்தித்துச் சொல்லிக் கொண்டான் தேவனோ அவனை நோக்கி, மதிகேடனே! உன் ஆத்துமா உன்னிடத்திலிருந்து இந்த இராத்திரியிலே எடுத்துக் கொள்ளப்படும், அப்பொழுது நீ சேகரித்தவைகள்



யாருடையதாகும் என்றார் தேவனிடத்தில் ஐசுவரிய வானாயிராமல் தனக்காகவே பொக்கிஷங்களைச் சேர்த்து வைக்கிறவன் இப்படியே இருக்கிறான் என்றார். பின்னும் அவர் தம்முடைய சீஷரை நோக்கி: இப்படியிருக்கிறபடியினால், என்னத்தை உண்போம் என்று உங்கள் ஜீவனுக்காகவும், என்னத்தை உடுப்போம் என்று உங்கள் சரீரத்துக்காகவும் கவலைப்படாதிருங்கள் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆகாரத்தைப் பார்க்கிலும் ஜீவனும், உடையைப் பார்க்கிலும் சரீரமும் விசேஷித்தவைகளாயிருக்கிறது. காகங்களைக் கவனித்துப் பாருங்கள். அவைகள் விதைக்கிறதுமில்லை. அறுக்கிறதுமில்லை. அவைகளுக்குப் பண்டசாலையுமில்லை. களஞ்சியமுமில்லை. இல்லாவிட்டாலும் அவைகளையும் தேவன் பிழைப்பூட்டுகிறார்; பறவைகளைப் பார்க்கிலும் நீங்கள் எவ்வளவோ விசேஷித்தவர்களாயிருக்கிறீர்கள். கவலைப்படுகிறதினால் உங்களில் எவன் தன் சரீர அளவோடு ஒருமுழத்தைக் கூட்டுவான்? மிகவும் அற்பமான காரிய முதலாய் உங்களால் செய்யக் கூடாதிருக்க மற்றவைகளுக்காக நீங்கள் கவலைப்படுகிறதென்ன? காட்டுப் புஷ்பங்கள் எப்படி வளருகிறதென்று கவனித்துப் பாருங்கள்; அவைகள் உழைக்கிறதுமில்லை. நூற்கிறதுமில்லை, என்றாலும் சாலொமோன் முதலாய்த் தன் சர்வ மகிமையிலும் அவைகளில் ஒன்றைப் போலாகிலும் உடுத்தியிருந்ததில்லையென்று உங்களுக்குச் சொல்லுகிறேன். இப்படியிருக்க, அற்ப விசுவாசிகளே, இன்றைக்குக் காட்டிலிருந்து நாளைக்கு அடுப்பிலே போடப்படுகிற புல்லுக்குத் தேவன் இவ்விதமாய் உடுத்துவித்தால், உங்களுக்கு உடுத்துவிப்பது அதிக நிச்சயமல்லவா? ஆகையால், என்னத்தை உண்போம், என்னத்தைக் குடிப்போம் என்று நீங்கள் கேளாமலும் சந்தேகப்படாமலும் இருங்கள். இவைகளையெல்லாம் உலகத்தார் நாடித் தேடுகிறார்கள்: இவைகள் உங்களுக்கு வேண்டியவைகளென்று உங்கள் பிதாவானவர் அறிந்திருக்கிறார்

தேவனுடைய இராஜ்யத்தையே தேடுங்கள்; அப்பொழுது இவைகளெல்லாம் உங்களுக்குக் கூடக் கொடுக்கப்படும்" (லூக்கா 12:15-31)

"பண ஆசை எல்லாத் தீமைக்கும் வேராயிருக்கிறது." சிலர் அதை இச்சித்து, விசுவாசத்தை விட்டு வழி விலகிப் போயுள்ளார்கள், யூதாஸ் காரியோத் பண ஆசை கொண்டான் பணத்தை இச்சித்தான் அப்பண ஆசை அவனை ஆண்டவரிடமிருந்து வழிவிலகிப் போகப் பண்ணியது அப்பண ஆசை அவனை நான்றுகொண்டு சாகுமாறு செய்துவிட்டது. அவனுடைய சரீரம் சாகு முன்னரே, அவனுடைய ஆத்துமா செத்துவிட்டது. எப்பொழுது பண ஆசையால் இயேசுவை விட்டுப் பிரிந்தானோ, அப்பொழுதே இவன் ஆத்துமா செத்துவிட்டது. ஆகாப் போன்றவர்களுக்கும், யூதாஸ் போன்றவர்களுக்கும், பேராசை மதிகேடன் போன்றவர்களுக்கும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து விடுத்துள்ள எச்சரிப்பு இதுதான்: "தேவனிடத்தில் ஐசுவரியவானாயிராமல், தனக்காகவே பொக்கிஷங்களைச் சேர்த்து வைக்கிறவன் இப்படியே இருக்கிறான்" (லூக்கா 12:21)

நாம் பிறவியிலேயே பொருளாசைக்காரராகப் பிறந்துள்ளோம். நம்மில் சிறியோர் முதல் பெரியோர் வரை யாவரும் பொருளாசைக்காரராக இருக்கிறோம். சத்திய வேதாகமம் இவ்வுண்மையை வெகு தெளிவாய் எடுத்துக் காட்டியுள்ளது. "அவர்களில் சிறியோர் முதல் பெரியோர் மட்டும், ஒவ்வொருவரும் பொருளாசைக்காரர்"(எரே.6:13) மற்றக் கொடிய பாவங்களைப்போல் பேராசையும் நம்மைக் கொன்று நரகத்தில் தள்ள வல்லதொரு கொடிய பாவமாகும் "அவர்கள் சகலவித அநியாயத்தினாலும், வேசித்தனத்தினாலும், துரோகத்தினாலும், பொருளாசையினாலும், குரோதத்தினாலும் நிறையப்பட்டு; பொறாமையினாலும், கொலையினாலும், வாக்குவாதத்தினாலும், வன்மத்தினாலும், நிறைந்தவர்களுமாய், புறங்கூறுகிறவர்களுமாய், அவதூறு பண்ணுகிறவர்களுமாய், தேவ பகைஞருமாய், துராகிருதம்பண்ணுகிறவர்களுமாய், அகந்தையுள்ளவர்களுமாய் வீம்புக்காரருமாய், பொல்லாதவைகளை யோசித்துப் பிணைக்கிறவர்களுமாய், பெற்றோருக்குக் கீழ்ப்படியாதவர்ளுமாய், உணர்வில்லாதவர்களுமாய் உடன்படிக்கைகளை மீறுகிறவர்களுமாய், சுபாவ அன்பில்லாதவர்களுமாய், இணங்காதவர்களுமாய் இரக்கமில்லாதவர்களுமாய் இருக்கிறார்கள். இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்கள் மரணத்திற்குப் பாத்திரமாயிருக்கிறார்களென்று தேவன் தீர்மானித்த நீதிபதியான தீர்ப்பை அவர்கள் அறிந்திருந்தும், அவைகளைத் தாங்களே செய்கிறதுமல்லாமல், அவைகளைச் செய்கிற மற்றவர்களிடத்தில் பிரியப்படுகிறவர்களுமாயிருக்கிறார்கள்" (ரோமர் 1:29-32)



நாம் மனந்திரும்பி விபசாரம் , கொலை, களவு, பொய் போன்ற மாபெரும் கொடிய பாவங்களை விட்டு விலகுவது போல், பிறர் பொருளை இச்சித்தலையும் விட்டு விலக வேண்டும். கடவுள் தந்துள்ள கற்பனையை நோக்குங்கள். "விபசாரம் செய்யாதிருப்பாயாக, களவு செய்யாதிருப்பாயாக, பொய்ச் சாட்சி சொல்லாதிருப்பாயாக, இச்சியாதிருப்பாயாக" (ரோமர்,13:9).

மற்றப் பாவங்கள் செய்கிறவர்களைப்போல் பொருளாசைக்காரரும், தேவனுடைய இராஜ்யத்தைச் சுதந்தரிப்பதில்லை என்று பரிசுத்த வேதாகமம் பறைசாற்றியுள்ளது, "அநியாயக்காரர் தேவனுடைய இராஜ்யத்தைச் சுதந்தரிப்பதில்லையென்று அறியீர்களா? வஞ்சிக்கப்படாதிருங்கள்: வேசிமார்க்கத்தாரும், விக்கிரகாராதனைக்காரரும், விபசாரக்காரரும், சுய புணர்ச்சிக்காரரும், ஆண் புணர்ச்சிக்காரரும், திருடரும், பொருளாசைக்காரரும், வெறியரும், உதாசீனரும், கொள்ளைக்காரரும், தேவனுடைய இராஜ்யத்தைச்

சுதந்தரிப்பதில்லை. உங்களில் சிலர் இப்படிப்பட்டவர்களாயிருந்தீர்கள். ஆயினும் கர்த்தராகிய இயேசுவின் நாமத்தினாலும். நமது தேவனுடைய ஆவியினாலும் கழுவப்பட்டீர்கள். பரிசுத்தமாக்கப்பட்டீர்கள். நீதிமான்களாக்கப்பட்டீர்கள். எல்லாவற்றையும் அனுபவிக்க எனக்கு அதிகாரமுண்டு. ஆகிலும் எல்லாம் தகுதியாயிராது. எல்லாவற்றையும் அனுபவிக்க எனக்கு அதிகாரமுண்டு, ஆயினும் நான் ஒன்றிற்கும் அடிமைப்படமாட்டேன். வயிற்றுக்கு போஜனமும், போஜனத்திற்கு வயிறும் ஏற்கும்: ஆனாலும் தேவன் இதையும் அதையும் அழியப்பண்ணுவார்" *(1 கொரி.6:9-13)*.

சிலருக்கு வயிறுதான் சுவாமியாகிவிடுகிறது. சிலருக்கு சிற்றின்பம்தான் சுவாமியாகிவிடுகிறது. சிலருக்குப் பணம் தான் சுவாமியாகிவிடுகிறது. அவர்கள் அல்லும் பகலும் ஓயாது, ஒழியாது முழு மூச்சுடனும் பணத்தையே தேடுகிறார்கள். பணத்தையே எப்பொழுதும் நாடுகிறார்கள், பணத்தையே கும்பிடுகிறார்கள். பண ஆசை அவர்கள் இதயத்தையெல்லாம் நிரப்பி விடுகிறது. அவர்கள் கண்களையெல்லாம் மூடிவிடுகிறது. ஒரு வெள்ளிக் காசுதனை நம் கண்ணருகே கொணர்ந்து அதை நம் கண்ணில் ஒட்டி வைத்துக் கொண்டால் அக்கண்ணால் நாம் சூரியனைக்கூட பார்க்கமுடியாதபடி. அவ்வெள்ளிக்காசு நம் கண் பார்வையை மறைத்துவிடும். அதுபோல இருதயத்தில் ஒட்டிக் கொண்டு அதனை அடிமைப்படுத்திக் கொண்டிருக்கும் பண ஆசை, நாம் கிறிஸ்துவை காணமுடியாதபடி நம்மைத் தடுத்துவிடுகிறது. அப் பண ஆசையே நமக்கு ஒரு விக்கிரகாராதனைப்போல்ஆகிவிடுகிறது. பொருளாசை ஒருவகை விக்கிரகாராதனையே என்று பரிசுத்த வேதாகமம் எச்சரித்துள்ளது. பணப்பித்து, பொருளாசை வெறி, பேராசை கொண்டலையும் தற்கால மாந்தர், ஆண்டவராகிய இயேசு



கிறிஸ்து மாற்கு *8:36*இல் இயம்பியுள்ளதை மறந்து விட்டார்கள் போலும், மனுஷன் உலகம் முழுவதையும் ஆதாயப்படுத்திக் கொண்டாலும் தன் ஜீவனை நஷ்டப்படுத்தினால் அவனுக்கு இலாபம் என்ன?"

அடிமை வியாபாரத்திற்கு அடிப்படைக் காரணமாயிருந்து பொருளாசைதான். யுத்தங்களுக்கும், படையெடுப்புகளுக்கும், கொள்ளைகளுக்கும், கொலைகளுக்கும் காரணம் பொருளாசைதான். பொய்க்கும், புரட்டுக்கும் காரணம் பொருளாசைதான். சண்டைகளுக்கும், சச்சரவுகளுக்கும் காரணம் பொருளாசைதான். பாலில் நீர் ஊற்றுவதற்கும், தானியத்தில் கல்லும் மண்ணும் போடுவதற்கும் காரணம் பொருளாசைதான். சூதாட்டத்திற்கும், குதிரைப் பந்தய ஓட்டத்திற்கும் காரணம் பொருளாசைதான். இப் பொருளாசை எத்தனை இதயங்களைப் பிழிந்து திக்குமுக்காடச் செய்து கொண்டிருக்கிறது தெரியுமா? எத்தனை குடும்பங்களை நாசமாக்கியிருக்கிறது தெரியுமா? எத்தனை நாடுகளை கெடுத்திருக்கிறது தெரியுமா? பொருளாசை, பேராசை மனிதனைக் கொல்லும் ஒரு கொடிய பாவம்

கலிபோர்னியா வனாந்தரத்திலே சில ஆண்டுகட்கு முன் ஒரு பிணம், கையிலே காக்கைப் பொன்னை இறுகப் பிடித்துக்கொண்டு சுருண்டு கிடப்பதைச் சில பிரயாணிகள் கண்டார்கள். அப்பாலைவனத்து மணற் குன்றிலே தகதகவென்று தங்கம் போல் மினினி மினிர்ந்து பளிச்சிட்ட காக்கைப் பொன்னை உண்மையான தங்கம் என்று தவறாக கருதியதொரு மனிதன் அதனைக் கைப்பற்றுவான் வேண்டி மணற்குன்று மீதில் ஏறியபொழுது, மணல் சரிந்து அவன் தவறி விழுந்து பிணம் ஆனான். பொன்னாசை அவன் வாழ்வை மண்ணாக்கி விட்டது, அவன் உடலைப் பிணமாக்கி விட்டது. ஆத்துமாவையும் அழிக்க வல்ல பொருளாசையைக் குறித்து நாம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

ஐசுவரியமுள்ள வாலிபன் ஒருவன் இயேசு சுவாமியை அண்டியபொழுது இயேசு அவனைப் பார்த்து அவனிடத்தில் அன்புகூர்ந்து : "உன்னிடத்தில் ஒரு குறையுண்டு: நீ போய் உனக்கு உண்டானவைகளையெல்லாம் விற்று, தரித்திரருக்குக் கொடு; அப்பொழுது பரலோகத்தில் உனக்குப் பொக்கிஷம் உண்டாயிருக்கும் பின்பு சிலுவையை எடுத்துக் கொண்டு, என்னைப் பின்பற்றி வா என்றார். அவன் மிகுந்த ஆஸ்தியுள்ளவனாய் இருந்தபடியினால், இந்த வார்த்தையைக் கேட்டு, மனமடிந்து துக்கத்தோடே போய்விட்டான். அப்பொழுது இயேசு சுற்றிப் பார்த்து, தம்முடைய சீஷரை நோக்கி ஐசுவரியமுள்ளவர்கள் தேவனுடைய இராஜ்யத்தில் பிரவேசிப்பது எவ்வளவு அரிதாயிருக்கிறது என்றார். சீஷர்கள் அவருடைய வார்த்தை களைக் குறித்து ஆச்சரியப்பட்டார்கள். இயேசு பின்னும் அவர்களை நோக்கி: பிள்ளைகளே, ஐசுவரியத்தின்மேல் நம்பிக்கையாயிருக்கிறவர்கள் தேவனுடைய இராஜ்யத்தில் பிரவேசிப்பது எவ்வளவு அரிதாயிருக்கிறது. ஐசுவரியவான் தேவனுடைய இராஜ்யத்தில் பிரவேசிப்பதைப் பார்க்கிலும் ஒட்டகமானது ஊசியின் காதிலே நுழைவது எளிதாயிருக்கும் என்றார் அவர்கள் பின்னும் அதிகமாய் ஆச்சரியப்பட்டு அப்படியானால் யார் இரட்சிக்கப்படக்கூடும் என்று தங்களுக்குள்ளே சொல்லிக் கொண்டார்கள். இயேசு அவர்களைப் பார்த்து: "மனுஷரால் இது கூடாததுதான், தேவனால் இது கூடாததல்ல: தேவனாலே எல்லாம் கூடும் என்றார்" *(மாற்கு 10:21-27)*

பணக்காரராய் இருப்பது பாவமல்ல; ஆனால் அப்பணம், கிறிஸ்தவ நீதி நெறிப்படி சம்பாதிக்கப்பட்டதாய் இருக்கவேண்டும். அது கிறிஸ்துவை ஒதுக்கிவைத்துவிட்டு சம்பாதிக்கப்பட்ட செல்வமாய் இருக்கக்கூடாது அது கிறிஸ்து தந்த செல்வமாய் இருக்க வேண்டும். அது கிறிஸ்துவின் இராஜ்ய விருத்திக்கென்றும், கிறிஸ்துவின் நாம மகிமைக் கென்றும் செலவிடப்பட வேண்டும். வேதாகமத்தில் சில ஐசுவரியவான்கள் தங்கள் ஐசுவரியத்தை கிறிஸ்துவின் நாம மகிமைக்கென்று செலவிட்டதைக் காண்கிறோம். "இயேசுவுக்குச் சீடனும் ஐசுவரியவானுமாயிருந்த யோசேப்பு என்னும் பேர் கொண்ட அரிமத்தியா ஊரான்" *(மத்.27:57)* இயேசுவுக்கென்று தன்னுடைய பொருளை மனப்பூர்வமாய் செலவிட்டதைப் பற்றி வாசிக்கின்றோம். நம்முடைய செல்வத்தை நமக்கென்று மட்டும் வைத்துக் கொள்ளக் கூடாது. தேவைப்படுவோர்க்கு மனமுவந்து கொடுத்து சேவைசெய்ய வேண்டும். கைம்மாறு கருதாது பிறருக்கு உதவி செய்ய வேண்டும். நம்முடைய உடல், பொருள், ஆவி அனைத்தும் ஆண்டவருக்கென்று அர்ப்பணம் செய்யப்பட வேண்டும்.



ஐசுவரியவான்களுக்கு மட்டுமல்ல, ஏழைகளுக்கும் பண ஆசை உண்டு, பேராசை உண்டு, பிறர் பொருள் மீது இச்சை உண்டு, மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை போன்ற ஆசைகளால் மாந்தர் அவதிப்படுகின்றனர் பண ஆசை அகில உலகத்தாரையும் அரிபிளவைப்போல் அரித்துக் கொண்டிருக் கிறது. பேராசை, பொருளாசை, பிறர் பொருள் மீது இச்சை, பண ஆசை, போன்ற பாவங்களால் அடிமையாக்கப்பட்டு ஊடுருவக் குத்துண்டு கிடக்கிற உனக்கு விமோசனமே இல்லையா? ஒரே ஒரு விமோசனந்தான் உண்டு "இயேசு கிறிஸ்துவின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி, நம்மைச் சுத்திகரிக்கும். நமக்கு பாவமில்லையென்போமானால், நம்மை நாமே வஞ்சிக்கிறவர்களாயிருப்போம், சத்தியம் நமக்குள் இராது. நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால், பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மைச் சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியும் உள்ளவராயிருக்கிறார்" *(1 யோவான் 1:7-9)* "ஒருவன்

கிறிஸ்துவுக்குள்ளிருந்தால் புது சிருஷ்டியாயிருக்கிறான் பழையவைகள் ஒழிந்து போயின எல்லாம் புதிதாயின" (2 கொரி.5:17) "தேவன் நம்மை அசுத்தத்திற்கல்ல பரிசுத்தத்திற்கே அழைத்திருக்கிறார். நீங்கள் பரிசுத்தமுள்ளவர்களாக வேண்டுமென்பதே தேவனுடைய சித்தமாயிருக்கிறது" (1 தெச 4:3-7) "கிறிஸ்து இயேசுவுக்குட்பட்டவர்களாயிருந்து, மாம்சத்தின்படி நடவாமல் ஆவியின்படியே நடக்கிறவர்களுக்கு ஆக்கினைத் தீர்ப்பில்லை" (ரோமர் 8:1).

'கொல்லும் கொடிய பாவங்கள் ஏழு' – என்ற இந்நூலில் பண்டிதர் பில்லி கிரகாம் அவர்கள், பல வகைப்பட்ட பாவங்களை ஆணவம், சினம், பொறாமை, காமம், பெருந்தீனி, சோம்பல், பேராசை ஆகிய ஏழு தலைப்புகளின் கீழ் பிரித்து, இப்பாவங்களின் கொடிய தன்மைகளை விளக்கி, அவைகளிலிருந்து விடுதலையாகும் வழியையும் தெளிவாக விவரிக்கின்றார்.

கொடிய பாவத்தையும், அதன் விளைவுகளையும் குறித்து இன்றைய சமுதாயத்தில் வாழும் எவ்வயதினரும் தீவிரமாக சிந்திப்பதுமில்லை; பாவப் பழக்கங்களிலிருந்து முற்றிலும் விடுபடவேண்டும் என்று முயற்சிப்பதுமில்லை. விடமுடியாத பாவங்களுக்கு அடிமையானவர்கள் அவைகளிலிருந்து விடுபடும் வழியைக் காணாது தவிக்கின்றனர். இந்நிலையிலுள்ள எத்தரப்பினருக்கும் இந்நூல் மிகவும் பயன்படும்.

பாவங்கள் ஆத்துமாவை மட்டுமன்றி, சரீரத்தை கொல்லவல்லது. எனவே இவைகள் ஜெயமெடுக்கவும், வெற்றியுள்ள கிறிஸ்தவ வாழ்க்கை வாழவும், நாள்தோறும் நம்மை நாமே தற்பரிசோதனை செய்து கடவுளண்டை நெருங்கவும், தூய வாழ்வுக்கு வழிகாட்டியாகவும் இந்நூல் அமையும் என்பதில் சந்தேகமில்லை.

**FREEDOM FROM THE SEVEN DEADLY SINS**

BILLY GRAHAM

**விலை ரூ. 25.00**



**EVANGELICAL LITERATURE SERVICE**
95-A, VEPERY HIGH ROAD, CHENNAI - 600 007
Tel 5323231 6420173 Fax 91 (44) 6420173
E-mail <elsindia@md4 vsnl net in>